# ஒப்பிலா ஒருமூவர்

சிறுத்தொண்டர், கண்ணப்பர், திருநீலகண்டர்
ஆகிய மூன்று நாயன்மார் கதை
வெண்பாக்களில்





அ. கி. வரதராசன்

வெளியீடு: திருமுறை மாநாட்டுக் குழுவினர், சிங்கப்பூர்

# ஒப்பிலா ஒருமூவர்

சிறுத்தொண்டர், கண்ணப்பர், திருநீலகண்டர்

ஆகிய மூன்று நாயன்மார் கதை

(வெண்பாக்களில்)

அ. கி. வரதராசன்

சிங்கப்பூர்

திருமுறை மாநாடு ஏற்பாட்டுக் குழுவினரின்

2012ஆம் ஆண்டு வெளியீடு

முதற்பதிப்பு : ஆடி 2012
உரிமை பதிவு : பதிப்புரிமை ஆசிரியருக்கு
நூல் : ஒப்பிலா ஒருமூவர்
ஆசிரியர் : வரதராசன், அ. கி.

அதபுஎ ISBN : 978-81-897-0847-7

விலை: சிங்கப்பூர் வெள்ளி Singapore $ 10

அச்சிடல் தயாரிப்பு:
காந்தளகம்
68, அண்ணா சாலை, சென்னை 600002.
091-44-28414505
www.tamilnool.com
tamilnool@tamilnool.com

# பொருளடக்கம்

# அ ணி ந் து ரை

ஓங்கி உலகளந்த உத்தமன் திருவருளால் கல்வியிற் சிறந்த கம்ப நாட்டாழ்வார் இராம காதை பாடினார். வில்லிப் புத்தூராழ்வார் பாரதம் பாடினார்.

இவையிரண்டும் பின்னால் வந்த புலவர்களால் வெண்பா யாப்பில் பாடப்பெற்று முறையே ''இராமயண வெண்பா'' என்றும் ''பாரத வெண்பா'' என்றும் வெளியிடப்பெற்றன. இவை வைணவத் தமிழாக மலர்ந்து மணம் பரப்பின.

சைவ சமயத்தில் தூக்குசீர் திருத்தொண்டத் தொகை விரி வாக்கினால் சொல்ல வல்ல பிரானாகிய சேக்கிழார் பெருமான் நாயன்மார் வரலாற்றுச் சிறப்பைப் பக்திச் சுவை நனி சொட்டச் சொட்டப் பாடினார். அவர் பாடிய பெரிய புராணம், எனக்குத் தெரிந்தவரை, இதுவரை வெண்பா யாப்பில் பாடப் பெற்று வெளிவரவில்லை.

இப்பொழுது சிவபெருமான் சிங்கப்பூரில் ஒரு திருவிளை யாடலைத் தொடங்கி இருக்கிறான். சைவப் பற்றும் தமிழ்ப் பற்றும் மிக்கவராக ஒரு கவிஞரை உருவாக்கி அவர் மூலம் பட்டினத்தார் பாராட்டிய மூன்று நாயன்மார் வரலாறுகளை வெண்பா யாப்பில் பாட வைத்திருக்கிறான். இப்படிச் சிவபெருமான் திருவருளால், ''எல்லாப் புலவர்க்கும் வெண் பாப் புலி'' என்று போற்றப்படும் வெண்பா யாப்பில்,

‘‘வாளால் மகவரிந் தூட்டிய’’ சிறுத்தொண்டர்,

‘‘மாது சொன்ன சூளால் வல்லிளமை துறந்த’’
திருநீலகண்டர்,

‘‘தொண்டு செய்து நாள் ஆறில் கண்ணிடந்து அப்பிய’’
கண்ணப்பர்.

என்னும் மூவர் புகழ்பாடும் பேறு பெற்றவர், நம்முடைய அன்புக்கும், மதிப்புக்கும் உரிய பெருங்கவிஞர் அ. கி. வரதராஜன் அவர்கள்.

இலக்கணத்தைப் படிக்காமல், அதைப் பற்றிக் கவலைப் படாமல், மடக்கி மடக்கி எழுதிவிட்டால் கவிதை என நினைத்துப் பாடும் கவிஞர்கள் அதிகமாகத் தெரியும் இக் காலத்தில், இலக்கணப் பிழையின்றிப் பொருள் புரியுமாறு இனிய வெண்பாக்களைப் பாடும் வரதராஜன் அவர்களை, *சிவபெருமான் திருவருள் பெற்றவர்* என்று பாராட்டாமல் வேறு எப்படிப் பாராட்டுவது? திருமுறை மாநாட்டை ஆண்டு தோறும் சிறப்பாக நடத்தும் சிங்கப்பூரில் வாழும் கவிஞர் மூலம், சிவபெருமான் தமிழ் நாட்டுக்கும் வழிகாட்டி இருக்கிறான் என்றுதான் எண்ணத் தோன்றுகிறது.

மூவர் புகழ் பாடும் இந்நூலை முழுவதும் படித்து மகிழ்ந்தேன்.

முதலில் சிறுத்தொண்டர் புராணம்.

அந்தாதியாகத் திகழும் சிறுத்தொண்டர் புராணம் நெஞ்சை அள்ளுகிறது. ‘‘*கூரான புத்தியுடைக் கோன்*’’ என்று பல்லவனைப் பாராட்டுவதும் (பாடல் 6) ‘‘*பெண்காட்ட ஒப் புப் பிறிதொன்று தேடுதல் வெண்காட்டு நங்கைக்கு வீண்*’’ (பாடல் 25) என்று சிறுத்தொண்டர் மனையரசியைச் சிறப்பிப்பதும், மன்றில் நடிக்கும் நாடகக் கூத்தனை, ‘‘*நாடகக் கோலம் தரித்தான் குளிர்ந்து*’’ என்று குறிப்பிடுவதும் (பாடல் 33) நம் மனத்தை இழுக்கின்றன. ‘‘*அவன் போட்ட திட்டம்*

*அறியாத தொண்டர்*'' (பாடல் 36) என்னும் போது, சிறுத் தொண்டர் மேல் நாம் இரக்கப்படுகிறோம். ''*தான்தோன்றி ஆனவர் தாரமொரு பாகத்தர் வான்நீங்கி வந்தார்*'' (பாடல் 45) என்று பாடும் போது சிவனுக்கு மீண்டுமொரு பாமாலை கிடைக்கிறது.

''கேட்ட கணவர் கிளர்ந்தெழும் ஆர்வத்தால்
ஒட்டம் பிடித்தார் உடன்'' (பாடல் 52)

என்ற வரிகளைப் படிக்கும் போது, சிறுத்தொண்டரை விட வேகமாக நாம் ஓடுகிறோம்; ஈற்றடி சிறக்க வெண்பாவும் அழகாக ஓடுகிறது.

''பாலகன் ஊனைப் பசியாறத் தந்தவரின்
சீலத்தை வார்த்தைகள் செப்பிடுமோ?'' (பாடல் 71)

என்றும்

சேர்ந்தே அமர்ந்துதன் செல்வனின் ஊனுண்ண
நேர்ந்ததே என்று நிலைகுலையார் – ஓர்ந்ததெலாம்
அன்னார் விருந்தும் அடிக்கடிப் பங்கமுறல்
உன்னுமது வொன்றே உளம். (பாடல் 84)

என்றும் பாடும் பொழுது சிறுத்தொண்டர், பெருந்தொண்டராகத் திகழக் காண்கிறோம்.

போர்க்களத்தில் சேனாதிபதியாக வெற்றி கண்டவர், இந்தச் சோதனையால் தடுமாறுவதைத்

தீர்க்கவழி தோன்றாமல் திக்கித் தவர்நின்றார்,
போர்க்களம் தாராப் புதிரன்றோ! – யார்க்குமே
சந்திக்க வொண்ணாச் சோதனையைத் தன்னடியார்
சிந்திக்க வைத்தான் சிவன். (பாடல் 89)

என்று பாடுவது, நம் மனத்தைக் கொள்ளை கொள்கிறது.

நூற்பயனாக,

நாயன்மார் நற்காதை நாளும் நவில்வோரைப்
போயடையும் முற்றாகப் புண்ணியமே – காயமிதை

விட்டாவி போகுங்கால் வீடும் உரைப்பார்க்குக்
கட்டாயம் உண்டிங்கு காண்.

எனப் பாடும் பொழுது நமக்கும் பெரிய நம்பிக்கை உண்டா கிறது.

அடுத்தது, கண்ணப்ப நாயனார் புராணம்,

கண்ணப்பன் ஒப்பதோர் அன்பின்மை கண்டபின்,
என்னப்பன் என்னொப்பில் என்னையுமாட் கொண்டருளி,
வண்ணப் பணித்தென்னை வாவென்ற வான்கருணைச்
சுண்ணப்பொன் நீற்றற்கே சென்றூதாய் கோத்தும்பீ.

என்று மணிவாசகர் பாராட்டிய கண்ணப்பர், வரதராஜன் பாடிய 104 வெண்பாக்களிலும் கொலுவிருக்கிறார். இப்புராணத் திலும் அணியும் தொடையும் அழகாக அமைகின்றன.

பிள்ளைப் பேற்றின் பெருமையை,

''காசினியின் செல்வம் கணக்கின்றிப் பெற்றாலும்,
ஆசைக்கோர் செல்வன் அவர்க்கில்லை'' (பாடல் 6)

என்றும், திண்ணனிடம் கடவுளைப் பற்றி நாகன் கூறியதை,

''குடியிருப்பார் உச்சி, குடுமிக் கடவுள்
படியேறிச் சென்றவரைப் பார்ப்போம் – அடிபணிவோம்''
(பாடல் 19)

என்று பாடும் கவிஞருக்கு யாப்பு விரைவாகக் கைகொடுக் கிறது.

குடுமித் தேவரைப் பார்த்த திண்ணன்,

''இச்சைக் குரியவரே இன்றெனக் கிம்மலையில்,
அச்சோ வசமாய் அகப்பட்டீர்'' (பார்ல் 28)

என்றும்,

தன்னந் தனியீர்! தவிக்கின்றீர் யாருமின்றி,
இன்னமுதம் ஈவாரும் இங்கில்லை – முன்னருமைக்

காணாது காலம் கழித்தேன்; இனியும்மைப்
பேணாது போகேன் பெயர்ந்து. (பாடல் 30)

என்றும்

வில்லேந்து கையன் விழிமூடா வேட்டுவன்,
அல்லெல்லாம் நின்றான் அயர்வின்றி – எல்லையறு
பாசத்தால் காவற் பணிசெய்தான் தன்னெஞ்சை
நேசத்தால் முற்றும் நிறைத்து. (பாடல் 47)

என்றும் பாடும் பொழுது, ''*அன்பெனும் ஆறு கரையது புரள*'' என்ற திருவாசகம் நினைவுக்கு வருகிறது.

திண்ணப்பனைப் பற்றிச் சிவபெருமான்,

''மாசில்லா நல்ல மனமுடையான் என்றன்பால்
ஊசிமுனைத் துன்பம் உறப்பொறான்'' (பாடல் 63)

என்றுரைத்து,

''பாசுரம் எல்லாம் பயின்றிடான் என்றாலும்
நேசம் மிகுந்ததிவன் நெஞ்சு'' (பாடல் 65)

என்றும் கூறும் பொழுது நம் காதுகளில் தேன் பாய்கிறது.

திண்ணன் சிவனுக்குக் கண்ணைத் தோண்டி வைக்கும் பொழுது, ''*அன்புக்கும் உண்டோ அடைப்பு?*'' எனப்பாடும் கவிஞர் திருவள்ளுவரை நினைக்க வைக்கிறார்.

இறுதியாக,

''கண்ணப்பன் அன்பில் கடுகேனும் காட்டினால்
வண்ணமுறும் நம்முடைய வாழ்வு'' (பாடல் 102)

என்று நமக்கும் அறிவுரை கூறுகிறார்.

அடுத்தது, திருநீல கண்ட நாயனார் புராணம்.

இப்புராணத்தில், ''*தட்டாத் தளையும் தரமான சொல்ல ழகும்*'' தொட்டுத் தொடரத் தும்பிக்கை நாதன் துணை யிருக்கின்றான். கணவனைத் திருத்திய காரிகையானவள்

திருநீலகண்டரின் மனைவி. ''*அவள் முன் அருந்ததியும் அற்பம்*'' (பாடல் 14) என்கிறார் கவிஞர். ''*இன்பத் துறையில் எளியர் அவரானார்*'' (பாடல் 17) என்று பாடும் பொழுது, சேக்கிழாரின் செந்தமிழ்த் தென்றல் வீசுகிறது.

மனைவி ஆணையிடும்போது,

தீண்டாதீர் எம்மைத் தெரிவித்தாள் இல்லாளும்,
தாண்டாதீர் கோட்டைத் தவறியும் – ஆண்டான்
திருநீல கண்டத்துத் தெய்வத்தின் ஆணை
ஒருநாளும் சேரேன் உடல். (பாடல் 30)

எனப்பாடும் கவிஞரின் வெண்பாவும் கோட்டைத் தாண்டாமல் கொடிகட்டிப் பறக்கிறது.

ஆணையால் மாறிய திருநீலகண்டர்,

உள்ளமும் தீண்டா தொருபெண்ணை வாழ்விலினிக்,
கள்ளமிதில் செய்யேன் கடுகளவும் பள்ளமதில்
ஓர்முறை வீழ்ந்தேன் உணர்ந்தேன் பிழையினி
நேர்வழியே நிற்பேன் நினைந்து. (பாடல் 35)

என்று பேசும் பாடல், தடுமாறித் தவறிவிடும் ஆண்கள் இல்லங்களில் பொறிக்கப்பட வேண்டிய பாடலாகப் பொன்போல் ஒளிர்கிறது.

''மாதவள் தம்மை மனைவி என நோக்கார்,
ஏதிலார் என்றுதான் எண்ணுவார்'' (பாடல் 38)

என்ற வரிகள் சேக்கிழார் பாடிய திருநீலகண்டரின் வாக்குச் செம்மைக்கு மணம் சேர்க்கின்றன.

''கட்டிளம் பெண்ணவள் காளையிவர் என்றாலும்,
சுட்டெரித்தார் காமச் சுகந்தன்னை'' (பாடல் 43)

என்று பாடுவது இருவருக்கும் புகழ் சேர்க்கின்றது.

''முற்றும் துறந்த முனிவர்க்கும் ஆகாது
சிற்றின்ப ஆசைச் சிறைமீளல்'' (பாடல் 47)

என்றும்

ஓடினார்; முன்னம் ஒளித்த இடம்தன்னில்
தேடினார், காணார், திடுக்கிட்டார் – வாடினார்
சல்லடையாய் வீட்டைச் சலித்தாலும் காணாமல்,
எல்லையின்றி உற்றார் இடர். (பாடல் 65)

என்றும் பாடும் பொழுது, பழைய ஔவையார் பாடல்களைப் படித்த நினைவு வருகிறது.

''தப்புவழி சென்றதனால் தண்டனை பெற்றவரும்,
தப்பவழி இன்றித் தலைகுனிந்தார்'' (பாடல் 86)

என்ற பாடல் சாட்டையடி போல் விழுகிறது.

இத் தொண்டர் வரலாற்றைத் ''*தொடர்ந்து படித்திட் டால் உண்டு உனக்கென்றும் உயர்வு*'' என்று கவிஞர் நமக்கு நல்ல பலன் சொல்வது, நம்பிக்கை தருகிறது.

இந் நூலைப் படித்ததும் நம் நெஞ்சில், சேக்கிழார் பெருமான் மறுவடிவம் பெறுகிறார். இப்படி வெண்பாப் பாடுவதற்குத் தமிழறிவு மட்டும் போதாது. சிவபெருமான் மேல் பக்தியும், திருமுறைப் பயிற்சியும், அரனருளும் வேண்டும். இவை மூன்றும் வரதராஜக் கவிஞருக்கு வளமாய்க் கிடைத்துள்ளன.

அறுபத்து மூவரில் இந்த மூவர் வரலாறுகளை மட்டும் வெண்பாவில் பாடி, விட்டுவிட்டால் மற்ற நாயன்மார்கள் எல்லாரும் மனம் வருந்த மாட்டாரா?

வரதராஜக் கவிஞரின் வாழ்க்கைக் குறிக்கோளாகப் ''பெரிய புராண வெண்பா'' அமையட்டும் என்று வாழ்த்துகிறேன். அன்னை மீனாட்சி அவருக்குத் துணையிருப்பாள். தன்னை உணர்ந்து தமிழ்பாட வைத்திடுவாள். காலம் இடம் கொடுக்கும்; கடவுளருள் கைகொடுக்கும்.

வரதராஜ வெண்பா வளமோடு பொங்கிவரும்.

## சாற்றுகவி

மூவர் புகழ்பாடும் முத்தமிழ்வெண் பாமாலை,
தேவர் புகழச் சிறப்பான – காவியமாய்,
சிங்கப்பூர் போற்றத் திகழ்வரத ராஜகவி
மங்கலமாய்ச் சொன்னான் மகிழ்ந்து.

கண்தந்த வள்ளல் கறிதந்த வள்ளலுடன்,
பெண்தந்த வள்ளலையும் பேசினான் – பண்ணார்ந்த
வெண்பாவால் மாலையிட்ட வேள்வரத ராஜகவி
மண்புகழ வாழ்க வளர்ந்து.

கோவிலூர் மூவரில்லை, கூறுபுக ழேந்தியிலை
யாவருளார் வெண்பா இனிப்பாட? – பூவுலகில்,
என்றேங்கும் நேரம் எழில்வரத ராஜனிம்
மன்றேறி வென்றான் மலர்ந்து.

மன்றெல்லாம் ஈசன் மகிழ்வோடு கூத்தாடக்
குன்றெல்லாம் வேலன் குலவையிட – நன்றாக
வெண்பா உரைத்த வியன்வரத ராஜனருட்
பண்பால் உயர்க பணிந்து.

மங்கலமாய்ப் பாடும் வரதரா ஜக்கவிஞன்,
சிங்கப்பூர் பேருயரச் செய்துவிட்டான் – தங்கிடவே
இன்னும்வெண் பாப்பாடி என்றும் சிவனருளால்
தென்தமிழ்போல் வாழ்க சிறந்து.

பணிவுள்ள,
பொற்கிழிக் கவிஞர்
சொ. சொ. மீ. சுந்தரம்
சிங்கப்பூர் - 07/11/2011

940



# முன்னுரை

பெரியது கேட்கின் எரிதவழ் வேலோய்
பெரிது பெரிது புவனம் பெரிது
புவன மோநான் முகன்ப டைப்பு
நான்முகன் கரியமால் உதிரத்தில் உதித்தோன்
கரிய மாலோ அலைகடல் துயின்றோன்
அலைகடல் குறுமுனி கலசத்தில் அடக்கம்
கலச மோபுவி யிற்சிறுமண்
புவியோ அரவினுக்கு ஒருதலைப் பாரம்
அரவோ உமையவள் ஒருசிறு மோதிரம்
உமையோ இறைவர் பாகத் தொடுக்கம்
இறைவரோ தொண்டர் உள்ளத் தொடுக்கம்
தொண்டர்தம் பெருமை சொல்லவும் பெரிதே

என்று பாடினார் ஔவையார்.

மாணிக்கவாசகர் இறைவனைக் காண விழைந்து,

''*ஏதவன் ஊர்? ஏதவன் பேர் ? ஆர் உற்றார்? ஆர் அயலார்*'' என விசாரித்துவிட்டு, இறுதியில், ''*ஓத உலவா ஒரு தோழன் தொண்டர் உளன்*'' (இறைவன் தொண்டர் உள்ளத்தில் உறைகின்றான்) என்று உணர்கின்றார்.

இத்தகைய தொண்டர்கள் சிவபெருமானுக்கும், சிவனடி யார்க்கும் பணிசெய்யும் நிலையில் திருத்தொண்டர்கள் என

அழைக்கப் பெற்றனர். இத்தகைய திருத்தொண்டர்களை வகைப்படுத்திச் சுந்தரர் ''திருத்தொண்டத் தொகை'' பாடினார்.

சிவபெருமானே, ''*தில்லை வாழ் அந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்*'' என அடியெடுத்துக் கொடுத்த பெருமை இதற்கு உண்டு. இத்தொகையை அடியொற்றிப் பின்வந்த நம்பியாண்டார் நம்பி ''*திருத்தொண்டர் திருவந்தாதி*' இயற்றினார். இவை இரண்டையும் விரித்துச் சேக்கிழார் ''*திருத்தொண்டர் புராணம்*'' என்னும் பெரிய புராணம் தந்தார்.

இவை முறையே தொகை, வகை, விரி நூல்களாகக் கருதப் பெறும். மேலும் இவை ஏழாம், பதினொன்றாம், பன்னிரண்டாம் திருமுறைகளாக வைத்துப் பேணப்படுகின்றன. இறைவன், ''*உலகெலாம்*'' என அடியெடுத்துக் கொடுத்த பெருமை பெரிய புராணத்திற்கும் உண்டு.

திருத்தொண்டர்களை நாயன்மார் என அழைப்பதும் உண்டு.

''மதிவளர் சடைமுடி மன்றுளா ரைமுன்
துதிசெயும் நாயன்மார்''

என்று நாயன்மார்களுக்கு இலக்கணம் கூறுகிறார் சேக்கிழார். அதாவது சிவபெருமானை மனத்தால் நினைத்து (முன்) வாயினால் துதி செய்கின்ற (செய்) பெருமக்களே நாயன்மார்கள் ஆவர். இத்தகைய நாயன்மார்களாகிய தொண்டர்களின் பெருமையைப் பேசுவது என்பது, கடல்நீரை நாய் குடிக்க முயல்வதற்கு ஒப்பாகும் என்பது சேக்கிழார் வாக்கு.

தெரிவரிய பெருமைத் திருத்தொண்டர்களில் மூவரைத் தேர்ந்தெடுத்துப் பட்டினத்தார்,

வாளால் மகவரிந்து ஊட்ட
வல்லேன் அல்லேன்; மாதுசொன்ன
சூளால் இளமை துறக்க
வல்லேன் அல்லேன்; தொண்டுசெய்து

நாளாறில் கண்ணிடத்து அப்ப
வல்லேன் அல்லேன் நான்இனிச்சென்று
ஆளாவது எப்படியோ திருக்காளத்தி அப்பருக்கே?

என்று நெக்குருகிப் பாடுகிறார். இப்பாட்டில் கூறப்படும் சிறுத் தொண்டர், திருநீலகண்டர், கண்ணப்பர் ஆகிய மூன்று பேரின் வரலாற்றை வெண்பா வடிவில் குறுங்காவியமாகச் சேக்கிழார் அடிச்சுவட்டில் சென்று, கவிஞர் வரதராஜன் இயற்றி, தொடர்ச்சியாகச் சென்ற மூன்று திருமுறை மாநாட்டு நிகழ்ச்சிகளில், சுவைபடப் படித்தும் நடித்தும் அரங்கேற்றினார்.

இப்போது ''ஒப்பிலா ஒருமூவர்'' என்ற தலைப்பில், அவ் வெண்பாக்களை நூலாக, திருமுறை மாநாட்டு ஏற்பாட்டுக் குழுவினர் வெளியிடுவது அறிந்து பெருமகிழ்ச்சி அடைகின் றேன்.

இம்மூவர்க்குள்ள ஒப்பிலாத் தன்மை பற்றி ஒரு சிறிது பார்ப்போம்.

திருஞான சம்பந்தர் காலத்தில் சிறுத்தொண்டர் வாழ்ந் தவர். இவர் இயற்பெயர் பரஞ்சோதியார். திருச்செங்காட்டங்குடி என்னும் ஊரினர். பல்லவ வேந்தனுக்குப் படைத் தளபதியாகப் பணியாற்றியவர். வாதாபிப் போரில் வென்று, அங்கிருந்து விநாயகர் சிலையை எடுத்து வந்து, திருச்செங்காட்டங்குடியில் அவருக்குக் கோவில் எழுப்பி வழிபட்டவர்.

பைரவக் கோலத்தில் வந்த சிவபெருமானுக்குத் தம் ஒரே மகனைக் கறி சமைத்து அமுது படைத்தவர். இவர் பெருமை யைத் திருஞான சம்பந்தர்,

''பொடிநுகருஞ் சிறுத்தொண்டருக்(கு)
அருள்செய்யும் பொருட்டாகக்
கடிநாகராய் வீற்றிருந்தான்
கணபதீச் சரத்தானே''

என்று பாடுகிறார். இப்பாடல் முதல் திருமுறையில் இடம் பெற்றுள்ளது.

மேலும் சம்பந்தர் திருச்செங்காட்டங்குடித் திருப்பதிகம் முழுவதிலும் இவரது பக்திச் சிறப்பினைப் பாடிப் பரவுகின்றார் என்றால், இவரது ஒப்பிலாத் தன்மை பற்றிவேறு எடுத்துக் காட்டும் வேண்டுமா என்ன?

''கன்னவிள்தோள் சிறுத்தொண்டன் கனபதீச் சரமேய,
இன்னமுதன் இணையடிக் கீழ்எனதல்லல் உரையீரே''

என்ற வரிகள் இடம்பெறும் பதிகம், மூன்றாம் திருமுறையில் உள்ளது.

சிறுத்தொண்டர் என்னும் பெயர் சிவனடியார்க்கு மிகவும் தாழ்ந்து பணிசெய்த காரணத்தால் அவர் பெற்ற பெயராகும். ''*பணியுமாம் பெருமை*'' அன்றோ?

ஞானசம்பந்தரின் தோத்திரம் மட்டுமன்றி, திருக்களிற்றுப் படியார் என்னும் சாத்திர நூலும் சிறுத்தொண்டர் சிறப்பை - அவர் செயலை - வன்தொண்டு எனப் பெயரிட்டு,

வரங்கள் தரும்செய்ய வைரவர்க்குத் தங்கள்
கரங்களினால் அன்று கறியாக்க – இரங்காதே,
கொல்வினையே செய்யும் கொடுவினையே ஆனவற்றை
வல்வினையே என்றதுநாம் மற்று.

என்னும் வெண்பாவினால் பாராட்டுகின்றது. இவ்வாறு தோத்திரமும் சாத்திரமும் போற்றும் பெருமை சிறுத்தொண் டர்க்கு உண்டு.

பட்டினத்தார் பாடலில் இரண்டாவதாக இடம் பெறுபவர், மாதுசொன்ன, *தீண்டுவீராயின் நம்மைத் திருநீலகண்டம்* என்ற - சூளால் இளமையை, அயலறியாது துறந்து வாழ்ந்த திருநீலகண்ட நாயனார்.

இவருக்கு இருக்கும் ஒப்பிலாத் தன்மை, சிற்றின்பத் துறை யில் எளியராய் இருந்த ஒருவர் இளமை இன்பத்தைத் துறந்த தும், அயலார் அதை அறியா வண்ணம் வாழ்ந்ததும், திருநீல கண்டத்தில் அளவில்லாப் பற்றுக் கொண்டதும் ஆகும்.

சுந்தரர் பாடிய திருத்தொண்டத் தொகையில், இறைவன் அடியெடுத்துக் கொடுத்த, *தில்லைவாழ் அந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்* என்று பாடிய வரியை அடுத்து, *திருநீல கண்டத்துக் குயவனார்க்கும் அடியேன்* என்ற அடி இடம் பெறுகிறது.

தில்லைவாழ் அந்தணர்கள் தொகை அடியார்களில் ஒரு வகையினர். தனி அடியார்கள் பட்டியலில் முதலிடம் பெறும் தனிச்சிறப்பினைத் திருநீலகண்டர் பெற்றிருப்பதே அவர்க் குரிய ஒப்பிலாச் சிறப்பாகும். தரிசிக்க முத்தி தரும் தில்லைக் கூத்தப் பெருமானைத் தினமும் வணங்கும் பேறு அவர்க்கு வாய்த்ததும் ஒரு பேறு ஆகும்.

பட்டினத்தார் பாடலில் அடுத்து இடம்பெறுபவர் அன்பிற் சிறந்த கண்ணப்பர். உறுப்புகளில் சிறந்த கண்ணையே இறைவனுக்குக் கொடுத்து, ஆறு நாள்களில் முத்தி பெற்றவர் அவர். அறுபத்து மூன்று நாயன்மார்களில் சம்பந்தர், அப்பர், சுந்தரர், மணிவாசகப் பெருமான் என நால்வரும் பாராட்டிப் பாடிய பெருமை பெற்றவர் இருவர். ஒருவர் கண்ணப்பர். மற்றவர் சண்டேசர்.

கண்ணப்பர் பெருமையை ஞானசம்பந்தர்,

வாய்கலச மாகவழிபாடு செய்யும்
வேடன்மல ராகுநயனம்
காய்கணை யினால்இடந்து ஈசனடி
கூடுகா ளத்தி மலையே (3.69.4)

என்றும், அப்பர் பெருமான்,

குவப்பெருந் தடக்கை வேடன்
கொடுஞ்சிலை இறைச்சிப் பாரம்,
துவர்பெருஞ் செருப்பால் நீக்கித்
தூயவாய்க் கலசம் ஆட்ட,
உவப்பெருங் குருதி சோர
ஒருகணை இடந்தாங்கு அப்பத்

தவப்பெருந் தேவு செய்தார்
சாய்க்காடு மேவி னாரே. (4.65.8)

என்றும் பாடியுள்ளனர்.

சுந்தரரோ, திருத்தொண்டத் தொகையில், ''*கலை மலிந்த சீர்நம்பி கண்ணப்பர்க்கு அடியேன்*'', என்று கல்வி கற்காத கண்ணப்பரை அவர்தம் பக்தி ஒருமை கருதிக் ''*கலை மலிந்த*'' என்னும் அடைமொழி கொடுத்துப் பாடிப் பணி கின்றார்.

மாணிக்கவாசகர் தம் திருவாசகத்தில்,

''கண்ணப்பன் ஒப்பதோர் அன்பின்மை கண்டபின்,
என்னப்பன் என்னொப்பில் என்னையுமாட் கொண்டருளி,
வண்ணப் பணித்தென்னை வாவென்ற வான்கருணை''

பற்றிப் பேசுகிறார்.

மேலும் பதினொன்றாம் திருமுறையில், கண்ணப்பர் புகழ் பாடும் இரண்டு நூல்கள் ''*திருக்கண்ணப்ப தேவர் திருமறம்*'' என்னும் பெயருடன் திகழ்கின்றன. இவற்றை நக்கீர தேவ நாயனார், கல்லாட தேவ நாயனார் ஆகிய இருவர் இயற்றினர். நக்கீர தேவ நாயனார் 167 அடிகள் கொண்ட ஆசிரியப் பாவா லும், கல்லாட தேவ நாயனார் 38 அடிகளைக் கொண்ட ஆசிரி யப் பாவாலும் பாடி உள்ளனர். நக்கீர தேவநாயனார் பாடிய திரு மறத்தின் இறுதியில்,

தத்தையாம் தாய்தந்தை நாகனாம் தன்பிறப்புப்
பொத்தப்பி நாட்டுடுப்பூர் வேடுவனாம் – தித்திக்கும்
திண்ணப்ப னாம்சிறுபேர் செய்தவத்தால் காளத்திக்
கண்ணப்ப னாய்நின்றான் காண்.

என்னும் வெண்பா இடம் பெற்றுள்ளது. இவ்வெண்பாவே கண்ணப்பர் வரலாற்றை மிகச் சுருக்கமாகத் தமிழிற் பாடிய முதல் வெண்பா எனத் தோன்றுகிறது.

அன்பின் திருவுருவமாகக் காட்சி அளிக்கும் கண்ணப்பரைத் *திருக்களிற்றுப்படியாராகிய* சாத்திர நூலும் வெண்பா யாப்பில் போற்றிப் பரவுவதைக் கீழே காண்க.

கண்ணப்பன் ஒப்பதோர் அன்பின்மை என்றமையால்,
கண்ணப்பன் ஒப்பதோர் அன்பதனைக் கண்ணப்பர்
தாமறிதல் காளத்தி யார்அறிதல் அல்லதுமற்(று)
யாமறியும் அன்பன்று அது. (52).

கண்ணப்பரின் ஒப்பிலாத் தன்மைக்குத் தோத்திரமும் சாத்திரமும் போற்றும் புகழே சான்று.

இனிப் பட்டினத்தார் பாடலில் சிறுத்தொண்டர், திருநீலகண்டர், கண்ணப்பர் எனவரும் வரிசை முறைக்கு ஞானியார் அடிகள் ஒரு காரணம் கூறுகிறார்.

சிறுத்தொண்டர் தொண்டு நிறைவேற அவர் மனைவி, மகன், தலைக்கறி சமைத்து வைத்த தாதி ஆகிய மூவர் அடங்கிய கூட்டணி தேவைப்பட்டது.

திருநீலகண்டர் தொண்டு நிறைவேற அவர், அவர்தம் மனைவி ஆகிய இருவரின் கூட்டணி வேண்டியிருந்தது.

இறுதியில் கண்ணப்பர் அன்புப் பணிக்கு அவர் ஒருவர் பக்தியே காரணமாயிற்று.

இதுவே ஞானியார் அடிகள் கூற்றாகும்.

மேற்கண்ட சிறுத்தொண்டர், திருநீலகண்டர், கண்ணப்பர் ஆகிய மூன்று திருத்தொண்டர்களையும் ''ஒப்பிலா ஒரு மூவர்'' எனக் கருதி, அதையே தலைப்பாக்கி, வெண்பாவில் தப்பிலாது பாடித் தந்த கவிஞர் வரதராசன் பாராட்டுக்குரியவர்.

அவர் வெண்பாக்கள், செப்பலோசை குன்றாத சிறப்புடையன. வகையுளி இன்றி வனப்புடன் திகழ்வன. பொருள் நயமும் சொல் நயமும் பொதிந்துள்ளன.

இவற்றை இவர் குரலில் கேட்டு இன்புற, கணினி ஒலிவட்டும் இந்நூலுடன் இணைத்துத்தரப் பெறுவது இரட்டிப்பு மகிழ்ச்சி தருகின்றது. படித்தாலும் படிக்கப் பக்க நின்றவாறு கேட்டாலும் தித்திக்கும் பாங்கினை இவ்வெளியீடு களின் வழி பெற இயலும். ஓசை தரும் இன்பம் உவமையிலா இன்பம் அன்றோ?

இவ்வெளியீடுகள் 2012ஆம் ஆண்டின் திருமுறை மாநாட்டு வெளியீடாகச் சிங்கப்பூர் திருமுறை மாநாட்டின் வாயிலாக வர இருப்பதறிந்து மகிழ்கிறேன். இவற்றை அனை வரும் வாங்கிப் படித்தும் கேட்டும், ''*ஆரூரில் அம்மானுக்கு அன்பர்*'' ஆவாராக.

பேராசிரியர் சுப. திண்ணப்பன்
தேசிய பல்கலைக் கழகம், சிங்கப்பூர்.
நவம்பர் 2011

# வாழ்த்துரை

## இறை வணக்கம்

ஒருகோட்டு நாயகனே ஊருமயில் வாகனனே
தருகூட்டு வெண்பாவில் தங்கி – மெருகூட்டும்
பாக்களினால் நாயன்மார் பண்புச் சரிதத்தேன்
பூக்களெனக் தாவா புரிந்து. 1

## பாராட்டுப் பதிகம் - அந்தாதி

வெண்பாவில் நாயன்மார் வேட்புச் சரிதையினைத்
தண்ணலைத் தென்றலெனத் தந்துவரும் – கண்ணனைய
என்நண்பர் சீர்வரத ஏற்புமிகு ராசனவர்
தன்னிகரில் பாவலரே தான். 1

தான்புனைந்த வெண்பாக்கள் சந்தமிகு நாயன்மார்
தேன்சரிதை சொல்லும் சிறப்பியல்பை – வான்நிறைந்த
தென்னன் மதுரைநகர் மன்னன் சிவன்கேட்க
இன்றிங்கே பாடுவதும் ஏற்பு. 2

ஏற்புடைய நாயன்மார் இன்பச் சரிதையினை
ஆற்றலுறு வெண்பாவில் அன்பொழுக – மாற்றறியாத்
தங்கமென மூவர் சரிதையினைச் சொல்லும்நூல்
இங்களித்தார் பக்தி இழைத்து. 3

இழைசேர்ந்த சேலை இயங்கும் நிலைபோல்
அழைக்கின்றார் வெண்பாவால் அன்பர் – பிழைமருவாச்
செஞ்சொல் இழையிட்டுச் சேர்த்தார் கதைகளையே
அஞ்சுகச்சொல் ஆங்கே அமைத்து. 4

அமைத்திட்ட வெண்பாக்கள் அத்தனையும் முத்தாய்ச்
சமைத்திட்ட நேர்மையினைச் சற்றும் – குமையாத
நெஞ்சத்தால் கூட்டம் நெகிழ்வதன் பாங்கினை
வஞ்சமறச் சொல்வேன் வகுத்து. 5

வகுத்த நெறிமாறா வண்தொண்டர் கண்டே
புகுத்தும் கருத்துக்கள் பொன்போல் – மிகுத்துவரும்
மேன்மையைக் கண்டு மிளிர்நெஞ்சால் வாழ்த்திடுவோம்
தென்றல் மலரெனத் தேர்ந்து. 5

தேர்ந்து திருவருளைச் சேர்த்திட்ட நாயன்மார்
சேர்ந்த சிவனடியார் செய்கையெலாம் – நேர்ந்த
சிவனருள் கூட்டிய சீரெல்லாம் சொன்னார்
பவக்கடல் நீத்தப் பணிந்து. 7

பணிவின் சிகரங்கள் பண்பின் அடியார்
அணிசெய் தியாகத்தை அன்பின் – பிணிப்பதனைச்
செய்திட்டார் வெண்பாவில் சீரான நற்சரிதை
உய்ந்திடுமோம் என்றே உணர்ந்து. 8

உணர்வின் பிழம்பாகி உள்ளத்தில் கண்ட
கணநேரக் காட்சிகளைக் காட்டி – தணல்கையின்
கொண்டோன் புகழ்சொல்லும் கோலமுறு வெண்பாக்கள்
கண்டு நமக்களித்தார் காண். 9

காண்பரிய சுந்தரைக் கண்டு திறந்திட்டே
பூண்பரிய பேறுகந்தோர் பூம்பதங்கள் – மாண்புயர
நாடுபுகழ் நாம்பெற்ற நல்மனித்தர் நாமென்று
பாடுகின்றேன் இந்தவெண் பா. 10

## வாழ்த்துப் பா

நாயன்மார் காதைகளை நல்லவெண் பாவடிவில்
நேயமுற யாத்தளித்தார் நித்திலம்போல் – தூயமன
நம்வரத ராசனவர் நாளெல்லாம் இன்பத்தில்
செம்மையுற வாழ்வர் சிறந்து. 1

வி. இக்குவனம்
சிங்கப்பூர்

## வெண்பாச் சிற்பி வி. இக்குவனம் யாத்த சித்திரக் கவி

நற்பிறப்பு நாயன்மார் நற்செயலில் நற்பொற்பு
அற்புதமாய் மூன்றுதரும் அன்பமைவும் - சொற்சுவையே
மிக்குமிகு நல்லவித மிக்குமிளிர் நம்வரதப்
பக்குவப் பாவலர் நம்பு.



# என்னுரை

எல்லாம் வல்ல தில்லை அம்பலவாணனை முதலில் வணங்கி இதை எழுதுகிறேன்.

இந்த நூல் இந்த வடிவத்தில் வெளிவருவதற்கு அந்தத் தில்லை அம்பலவாணனும் சிங்கை அம்பலவாண ஐயாவும் தான் காரணம்.

திருமுறைக்கும் எனக்கும் சிங்கையில் தொடர்பு ஏற்பட் டது சிங்கை திரு. க. அம்பலவாண ஐயா அவர்களால்தான். திருமுறை மாநாடு ஏற்பாட்டுக் குழுவின் தலைவராக அவர் விளங்கினார்.

அவ்விதம் அவர் ஏற்று நடத்திய மாநாடு தொடர்பிலான பல்வேறு போட்டிகளில் என் மகள் அனுபமா வரதராஜன் கலந்துகொண்டாள்.

1984 என்று நினைவு. அதுதான் சிங்கையில் திருமுறை யுடன் என் முதல் தொடர்பு. பின்னர் என் இரண்டாவது மகள் சௌம்யா வரதராஜனும் அக்காவைப் பின்பற்றி அப்போட்டி களில் பங்குபெற, இவ்விதம் என் இரு மகள்களை முன்

னிட்டே நான் திருமுறை மாநாட்டிற்கு அறிமுகம் ஆனேன்.

இம்மாநாட்டை நடத்திவந்த குழுவினரின் - (அதிலும் குறிப்பாக அம்பலவாணர் ஐயா, கனகசுந்தரம் ஐயா ஆகிய வரின்) - பணிவு, கனிவு, புரிந்துணர்வு, அன்பு, நேயம், செயல்திறன், திட்டமிடும் திறமை ஆகியவற்றால் முழுமை யாக ஈர்க்கப்பட்டு, திருமுறை மாநாடு ஏற்பாட்டுக் குழுவிலும் இணைந்து கொண்டேன்.

அக்குழுவினரும் என்னை வரவேற்று அன்புடன் அணைத்துக் கொண்டார்கள், குழுவில் இணைத்துக் கொண் டார்கள். அதன் பிறகு பல ஆண்டுகள் அம்பலவாணர் ஐயாவின் தொடர்பு நீடித்தது. அதன் மூலம் திருமுறை மாநாடு நிகழ்ச்சிகளில் ஒரு தொண்டனாக, இன்றளவும் பணி செய்யும் வாய்ப்பும் கிட்டியது.

சொல்லப் போனால், சிங்கப்பூரில் என் வீட்டைத் தவிர்த்து, நான் அதிகமுறை உணவு உட்கொண்ட வீடு, அம்பலவாணர் ஐயா வீடுதான். அந்த அருள்நெறி இல்லத்தில் எத்தனை முறை திருமுறை தொடர்பான கூட்டங்களில் பல திருமுறை அன்பர்களுடன் பங்கு பெற்று, கூட்டத்தின் முடிவில் உணவு உண்டிருக்கிறேன் என்பதை எண்ணிக்கை யில் இட்டுவிட இயலாது.

கண்மணி அம்மாவின் கனிவான உபசரிப்பால் எத்துணை மகிழ்ந்திருக்கிறோம் என் மனைவியும் நானும்! அம்பலவாணர் ஐயாவையும் கண்மணி அம்மாவையும் முதலில் நினைவு கூர்ந்து, அவர்களுக்கு முதற்கண் நன்றி கூறிக்கொள்கிறேன். அவர்கள் தான் என்னைத் திருமுறை மாநாட்டு நிகழ்ச்சிகளில் ஈடுபடுத்தியவர்கள்.

அடுத்தபடியாக, திருமுறை மாநாடு ஏற்பாட்டுக் குழுவினர்க்கு நான் நன்றி சொல்ல வேண்டும். எனக்குப் பலவழிகளிலும் ஆதரவு தந்தவர்கள் அவர்கள். என்னை உற்சாகப்படுத்தி, ஊக்குவித்து, இக்கவிதைகளை மாநாட்டு

நிகழ்ச்சிகளில் ஓர் அங்கமாக வாசிக்கும் வாய்ப்பினை எனக்கு அளித்தவர்கள் அவர்கள். அதுவும் ஒருமுறை அன்று, இருமுறை அன்று, மூன்று முறை இந்த வாய்ப்பினை வழங்கினார்கள்.

''அறுபத்து மூவர் குரு பூசை'' விழாவின் ஒரு அங்கமாகத் ''திருமுறைக் கவியரங்கம்'' என்ற ஒரு நிகழ்ச்சியை இடம் பெறச்செய்தார்கள் அவர்கள். அதுவும் ஏறக்குறைய 45 நிமிடங்கள் வரை இந்த நிகழ்ச்சிக்காக நேரம் ஒதுக்கித் தந்தார்கள். இடைவிடாமல் மூன்று ஆண்டுகள் எனக்கு வாய்ப்பு அளித்த அவர்களை அடிபணிகின்றேன். அவர்க ளுக்கு என்னுடைய உளங்கனிந்த நன்றி.

மாநாட்டு நிகழ்ச்சிகளில் இவ்வெண்பாக்களை வாசிக்கும் வாய்ப்பினை எனக்கு அளித்ததோடு மட்டும் இவர்கள் நின்றுவிடவில்லை. ஒரு படி மேலே போய், இம்மூன்று நாயன்மார் கதையையும் வெண்பா வடிவில் நூலாக வெளி யீடும் செய்கிறார்கள்.

ஒவ்வோர் ஆண்டும் திருமுறை மாநாட்டில் சில நூல் களையோ அல்லது ஒலி வட்டுக்களையோ வெளியீடு செய்து, அதன் மூலம் அரும்பெரும் திருமுறைப் பணி செய்து வருகி றார்கள் மாநாட்டு ஏற்பாட்டுக் குழுவினர்.

அந்த வகையில் 2012ஆம் ஆண்டில் சிங்கைத் திருமுறை மாநாட்டு ஏற்பாட்டுக் குழுவினர் வெளியிடும் நூலாக இது அமைகின்றது. இந்த மாநாட்டு வெளியீடுகளில் ஒன்றாக இதை வெளியீடு செய்யும் அவர்களுக்கு எவ்வளவு நன்றி சொன்னாலும் போதாது.

இவ்வெண்பாக்கள் புத்தக வடிவிலும், என் குரலிலேயே ஒலி வட்டு வடிவிலும் என்று இரு வகைகளிலும் வெளியீடு காணும் நல்வாய்ப்பினையும் நல்கியிருக்கிறார்கள். எவ்வளவு அன்பு என் மீது இவர்கள் கொண்டுள்ளார்கள்! இவர்களுக்கு

நான் எவ்வாறு நன்றி சொல்ல இயலும்?

அடுத்து இந்த நூலுக்கு அணிந்துரை எழுதித் தந்த பொற்கிழிக் கவிஞர் சொ. சொ. மீ. சுந்தரம் ஐயாவுக்கு என் நன்றி.

சிங்கையில் சொற்பொழிவுக்காக வந்திருந்த அவரிடம் நான் சென்று இந்நூலுக்கு ஓர் அணிந்துரை எழுதித் தரமுடியுமா என்று கேட்டவுடன், மலர்ந்த முகத்துடன் அவர் உடனே ஒப்புதல் தெரிவித்தார்கள்.

நூலை ஆழ்ந்து படித்து அனுபவித்துத் தன்னுடைய அணிந்துரையை அன்னார் வழங்கியுள்ளார். ஒப்புக்கொண்ட வண்ணமே சிங்கை விட்டு சென்னைக்குப் புறப்படும் முன்னர் இந்த அணிந்துரையை எழுதிக் கொடுத்தார்கள்.

அதற்கும் மேலாக, சாற்றுகவிகளாக ஐந்து வெண் பாக்களும் எழுதித் தந்தார்கள். அன்னாருடைய அன்புக்கும் ஆதரவுக்கும் என்றென்றும் நன்றியுடையவனாக இருப்பேன்.

அதே போன்று இந்நூலுக்கு முன்னுரை எழுதிக்கொடுத்த முனைவர். பேராசிரியர் சுப. திண்ணப்பன் அவர்களுக்கும் என் நன்றி.

இவ்வெண்பாக்களை மேடையில் வாசிக்கும் முன்பாக, ஒவ்வொருமுறையும் அவருக்கு அனுப்பி வைப்பேன். அவர் படித்து, கருத்துகள் சொன்ன பிறகு அவற்றை ஏற்றுத் திருத்தங்கள் செய்துகொண்ட பின்னரே இவற்றை மேடை யில் நான் வாசித்தேன்.

தேவைப்பட்ட போதெல்லாம் அறிவுரைகள் சொல்லி எனக்கு பலவகையிலும் ஊக்கமளித்து வழிகாட்டி உற்சாகப் படுத்தியவர் அவர். முன்னுரை வேண்டுமென்று நான் கூறியதும், உடனடியாக அதை எழுதித்தந்தவர் பேராசிரியர் திண்ணப்பன். அவருக்கும் என்னுடைய அன்பு கலந்த பணிவான நன்றி.

சிங்கப்பூரில் வெண்பா என்ற சொல் ஒலிக்கப்படும் போதெல்லாம் உடனே அனைவரின் நினைவுக்கும் வருபவர் திரு. இக்குவனம் அவர்கள். சிங்கையில் வெண்பாக்களுக்குத் தலைமை தாங்கி நடத்தும் வெண்பாச் சிற்பி அவர். அவரைப் பார்த்து வியந்து வாய் பிளந்து நிற்கின்றேன் இன்றளவும். என்றென்றும் இந்நிலை தொடரத்தான் செய்யும்.

திரு. இக்குவனம் அவர்களுடைய திறமை சொல்லில் அடங்காது. அவருடைய நட்பும் ஆதரவும் அரவணைப்பும் அன்பும் எனக்குக் கிட்டியது இறைவன் கூட்டிவைத்த திருவருள். அந்தக் கான மயிலைக் கண்டு கவிபாடும் ஆசை கொண்ட வான் கோழி நான்.

என்னுடைய பாக்களைப் படித்துப் பார்த்துத் தேவையான மாற்றங்கள் கூறி, திருத்தங்கள், பிழை நீக்கல் என்ற முறை களிலும் எனக்கு வழிகாட்டியவர் அவர். ஒவ்வொரு முறையும் மேடை ஏறுவதற்கு முன்னம், அவர் இல்லத்திற்குச் சென்று அவர் பாதங்களில் வீழ்ந்து பணிந்து, அவர் ஆசியைப் பெற்றுக்கொண்ட பின்னரே நான் இவற்றை அவையில் வாசித்தேன்.

இந்நூல் வெளிவரவாய்ப்புள்ளது என்று தெரிவித்தவுடன் சித்திரக் கவி ஒன்றை எழுதி வழங்கினார்கள். அவருடைய தற்போதைய உடல் நிலையிலும் கூட, சற்றும் தயக்கம் காட் டாமல் ஆர்வமுடன் முக மலர்ச்சியுடன் அவர் இதை வடித்துத் தருகிறேன் என்று சொல்லி அப்படியே அற்புதமான ஒரு சித்திரக் கவி (அன்ன பந்தம்) ஒன்றையும் அதனுடன் வாழ்த்துப் பதிகம் ஒன்றையும் வழங்கியிருக்கிறார். அவருக்கும் என்னுடைய உளம் கனிந்த நன்றி.

அவ்வண்ணமே சிறுத்தொண்டர் அந்தாதி வெண்பாக் களைப் படித்துக் கருத்துச் சொல்லி என்னை ஊக்குவித்த சிங்கப்பூர்க் கவிஞர் திரு. முருகடியான் அவர்களுக்கும் என் நன்றி.

நெல்லை மாவட்டத்தில் தாமிரபரணி ஆற்றின் கரையில் அமைந்துள்ள ஸ்ரீவைகுண்டத்தில் பிறந்தவன் நான். அங்குள்ள பள்ளியில் படித்தவன். படித்த பள்ளி ஸ்ரீகுமரகுருபர சுவாமிகள் ஆண்கள் உயர்நிலைப்பள்ளி. (ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பெண்கள் உயர்நிலைப்பள்ளி என்று தனியாக வேறொரு பள்ளியும் இருக்கிறது அவ்வூரில்.) குமரகுருபரர் பிறந்த ஊர் அவ்வூர்.

பள்ளியின் பெயரே, அப்பள்ளி மாணவர்களின் தமிழ் ஆர்வத்தை வெளிப்படுத்திவிடும். குமரகுருபரர் பாடல்கள் அக்காலத்தில் எங்கள் பள்ளி மாணவர்களிடையில் மிகவும் பேசப்பட்டவை.

கந்தர் கலிவெண்பா, சகலகலாவல்லி மாலை, நீதிநெறி விளக்கம் ஆகியவை பல மாணவர்களுக்கும் பழக்கமானவை. இவற்றில் பல பாடல்கள் மாணவர்கள் பலருக்கும் மனப் பாடமும் கூட.

அந்தப் பள்ளியில் எனக்குத் தமிழ் கற்பித்த ஆசிரியர் காசினி வேந்தன் ஐயா. அவரையும் இத்தருணத்தில் நன்றி யுடன் நினைத்துப் பார்க்கிறேன். இன்று தமிழில் ஏதோ கொஞ்சம் எழுதுகிறேன், பேசுகிறேன், பாக்கள் வடிக்கின்றேன் என்றால் இவை அனைத்திற்கும் அன்று என் பள்ளி நாள்களில் அவர், என்னுள் விதைத்த ஆர்வமும் மொழியறிவும் பயிற்சி யும்தாம் காரணம். அவர் அமைத்த அடித்தளத்தின் மீதுதான் நான் ஏதோ கட்ட முயன்று வருகிறேன். மீண்டும் அவருக்கு என் நன்றி.

எங்கள் பள்ளிக்கும் தேவாரப் பாடல்களுக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. திருப்பனந்தாள் அருள்மிகு காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் ஆதரவில் தேவாரப் போட்டிகள் ஒவ்வொரு ஆண்டும் நடைபெறுவது அன்றைய (அதாவது 1950களில்) வழக்கம். தேவாரப் பாடல்களைப் பண்ணுடனும் தாளத்துடனும் பாட வேண்டும். இதற்கு மேல், ஓர் எழுத்துத்

தேர்வும் உண்டு. எங்கள் ஊர்ப் பள்ளிகளில் பயிலும் ஆண் பெண் இருபால் மாணவர்களுக்கும் இப்போட்டிகள்.

பரிசு அந்தக் காலத்தில் 100 ரூபாய் என்று ஞாபகம். அது மட்டுமா ! முதற் பரிசு பெறும் மாணவனின் / மாணவியின் பெற்றோரை, திருப்பனந்தாள் மடம், தங்கள் செலவில் காசிக்கு அனுப்பி வைக்கும். அனைத்துச் செலவையும் - (இரயில் கட்டணம், காசியில் தங்கும் செலவுகள், இதர வழிச்செலவுகள் போன்ற அனைத்தையும்) திருப்பனந்தாள் மடமே ஏற்றுக்கொள்ளும்.

பள்ளிக் கூட மாணவர் ஒவ்வொருவரும் தம்முடைய பெற்றோருக்கு இந்த வாய்ப்பை ஏற்படுத்திதர வேண்டு மென்று முனைப்புடன் போட்டியில் பங்கு பெறுவார்கள். (என்னுடைய பெற்றோருக்கு இவ்வாய்ப்பை என்னால் வழங்க இயலவில்லை என்ற வருத்தம் இன்னும் என்னுள் உறைந்து கிடக்கின்றது).

எங்கள் ஊரிலிருந்த ஒவ்வொரு வீட்டிலும் அந்தந்த வீட்டு மாணவர்களின் தேவாரப் பாடல்கள் ஒலித்துக்கொண்டே இருக்கும் திருமுறைகளில் எனக்கிருக்கும் இந்தக் கொஞ்ச நஞ்ச ஈடுபாடும் அப்பள்ளி இட்ட பிச்சை தான். இது முற்றிலும் உண்மை. அப்பள்ளியையும் இந்த நல்ல சந்தர்ப்பத்தில் நன்றியுடன் நினைவில் கொள்கிறேன்.

இந்த நூலைச் சிறந்த முறையில் அச்சிட்டுத் தந்த காந்தளகத்திற்கும் என்னுடைய நன்றி. 2010ஆம் ஆண்டு நடைபெற்ற திருமுறை மாநாட்டு நிகழ்ச்சிகளுக்குத் திரு மறவன்புலவு க. சச்சிதானந்தன் அவர்கள், வந்திருந்தார்கள். அன்று கண்ணப்பன் காதை வெண்பாக்களை மாநாட்டு நிகழ்வில் அவர் முன்னிலையில் வாசிக்கும் பேறு எனக்குக் கிட்டியது.

இதை மறக்காமல் நினைவு வைத்து மற்றொரு சந்தர்ப்பத்

தில் அவர் சொன்ன போது அன்னாரின் பெருந்தன்மையை நான் வியந்து போற்றி நின்றேன். இப்புத்தகம் இன்று காந்தளகத்தில் அச்சுப் பெற்று வெளிவருவது மிகுந்த மகிழ்வைத் தருகின்றது.

சொ. சொ. மீ சுந்தரம் ஐயா எனக்கிட்ட பணியொன்றை அவரளித்த அணிந்துரையில் குறிப்பிட்டுள்ளார்கள். என்னுடைய வாழ்நாள் குறிக்கோளாக அதை நான் கொள்ள வேண்டும் அவர்கள் சொல்லியிருக்கிறார்கள்.

அப்பணியை எண்ணினால் மலைப்பாக இருக்கிறது. நான் இதற்குத் தகுதியானவனா என்ற தயக்கமும், அப்பணியின் பிரம்மாண்டமும் சிறப்பும் என்னை அச்சுறுத்துகின்றன. குருவியின் தலையில் பனங்காயை ஏற்ற இயலுமா? ஊர்க் குருவி பருந்தாகுமா? என்றெல்லாம் எண்ணித் தயங்குகிறேன்.

இருந்தாலும் முயற்சிசெய்யப் போகிறேன். எல்லாம் வல்ல இறைவன் அருளினால் அப்பணியும் நன்றாக நிறைவு பெறும் என்று எண்ணுகிறேன். அதற்காக அவன் அருளை வேண்டிப் பணிகின்றேன்.

அவனருளாலே அவன் தாள் வணங்கி, அவன் அடியார் கதைகள் சொல்வேனென்று நம்புகிறேன்.

நாயன்மார் காதையினை நாட்டோர் சுவைத்திடப்
போயெழு(து) என்றாரப் புண்ணியவான் – ''தூயநல்
வெண்பாவில் கேட்கும் விருப்பம் நிறைவேற்று'',
பண்பா(ல்) உரைத்தார் பரிந்து.

சுந்தரம் இட்டபணி சூழும் வகையறியேன்;
எந்தவித(ம்) ஏலும் இதுவெனக்கு? – தந்திடுவான்
சொக்கன் திறனனைத்தும் சொல்வேன் அவனருளால்
சிக்கலெலாம் போகும் சிதைந்து.

அம்பிகை பாகன் அருள்தன்னை மட்டுமே
நம்பி இறங்கிடுவேன் நானிதில் – எம்புதற்(கு)
எட்டா உயரம் எனுமுண்மை கண்டாலும்,
கட்டாயம் கைகூடும் காண்.

''நம்பினோர் கெடுவதில்லை; நான்கு மறைத் தீர்ப்பு'' என்பதுதானே எம் மாவட்டக் கவி பாரதியின் கூற்று- எனவே நம்பி இறங்கிடுவேன் நானிதில். அம்பிகையைச் சரண் புகுந்து அதிக வரங்கள் பெறுவேன்.

வரதராசன், அ. கி.
சிங்கப்பூர்
girijaraju@hotmail.com

# சிறுத்தொண்ட நாயனார் புராணம்

*(சிங்கப்பூரில் 26-07-2009 ஞாயிறு காலை, 29ஆவது திருமுறை மாநாட்டில் அறுபத்து மூவர் குருபூசை விழாவின் ஓர் அங்கமாகத் திருமுறைக் கவியரங்கத்தில் படித்தது.)*

## காப்பு

யாப்பும் பொருளுமாய் யாவர்க்கும் இன்பூட்டக்
காப்பெனக் கொண்டேன் கணபதியைத் – தோப்புக்
கரணங்கள் இட்டவன் கால்களில் வீழ்வேன்
சரணென்(று) அவனையே சார்ந்து.

## அந்தாதி வெண்பா (100)

முனைவேன் சபையோரை முற்றும்வெண் பாவில்
நனையவே வைத்திட நானும் – தினையளவும்
தன்னலம் இல்லாத் தவசீலர் காதையிது
கன்னலெனத் தித்திக்கும் காண். (1)

காணும் இடமெல்லாம் காவிரி தன்னெழிலை
நாணின்றிக் காட்டி நடக்கின்றாள் – மாணுடைய
ஊர்தனில் வாழ்ந்திருந்தார் ஒப்பற்ற தொண்டரெனப்
பேர்புகழ் எல்லாமே பெற்று. (2)

பெற்றார் பதவி படைக்குத் தலைவரெனக்
கற்றார் களரிக் கலையெல்லாம் – உற்ற
உரங்கண்(டு) அவனி ஒடுங்கியே ஓடும்
பரஞ்சோதி வல்லமை பார்த்து. (3)

பார்த்தவர் மிக்க பயங்கொண்(டு) இவருடைய
போர்த்திறம் தன்னைப் புகழ்ந்திடுவர் – கீர்த்திதரு
வெள்ளமெனக் கண்டார் விரைந்திடும் வெற்றிபல
பள்ளமடை என்றுவரப் பாய்ந்து. (4)

பாய்ந்தால் புலிதான்; பகைவர் களத்தினில்
மாய்ந்தாங்(கு) அழிவார் மறுநொடியில் – ஓய்ந்திடார்
இத்தரணி தன்னில் எவரையும் வீழ்த்துமொரு
சித்தியால் பெற்றார்நற் சீர். (5)

சீரான வெற்றிபல சேர வியப்புற்றுக்
கூரான புத்தியுடைக் கோனங்கு – வாரா
உரனின் அடித்தளத்தை ஓர்ந்தே அறிந்தான்
அரனின் அருளென்(று) அது. (6)

அதுவுணர்ந்த வேந்தன் அலமந்து சொன்னான்
"இதுஉணரா(து) ஆற்றினேன் இன்னல் – எதுவரினும்
போரினில் பங்கில்லை போயிடுவீர் இக்கணமே
ஊரினில் வாழ்வீர் உறைந்து." (7)

உறைந்தார் பரஞ்சோதி ஊரெய்தி நன்று;
நிறைந்தார் நியமத்தில் நின்று – சிறந்தவராய்
அன்புடன் சேவை அடியார்க்குச் செய்வார்நற்
பண்புகள் எல்லாம் படைத்து. (8)

படையினை நீங்கிப் பரமன் அடியே
கடைவழிக்(கு) ஆறெனெக் கண்டார் – கொடைசிறந்த
கோனும் கொடுத்தான் குறைவின்றித் தொண்டருக்(கு)
ஊனமறு செல்வம் உவந்து. (9)

உவந்த பரஞ்சோதி ஊர்வந்து வாழ்ந்தார்
சிவன்தாள் தினமணையும் சென்னி – தவமென்றே
தொண்டு பலசெய்து தூய மகிழ்வினைக்
கண்டுறை வாரதன் கண். (10)

கண்ணுதலான் பக்தரைக் காலம் முழுவதும்
நண்ணியிவர் ஆற்றுவார் நன்மையெலாம் – எண்ணிடார்
சீரென்று வேறொன்றைச் சீலர் இவர்புகழ்
பாரெங்கும் எட்டப் பரந்து. (11)

பரந்த மனத்தர் பரிவுடையார்; வீடும்
திறந்தே இருக்கும் தெருவில் – மறந்திடார்
சித்தத்தில் என்றும் சிவனடி வைத்திடப்
பத்தி நெறியின் படி. (12)

படிந்த பணிவென்னும் பண்பினில் நிற்பார்
கடிந்தவோர் சொல்லுமிவர் காணார் – மடியின்றி
என்பும் உருக இறைவனின் பக்தர்பால்
அன்புடன் வீழ்வார் அடி. (13)

அடியார் எனக்கூறி ஆர்வரினும் தொண்டர்
நெடிதாக வீழ்வார் நிலத்தில் – துடியாய்த்
துடித்துப் பலவகைத் தொண்டும் துவக்கி
முடித்துக் களித்திடுவார் முற்று. (14)

முற்றுமாய்ச் சேவைபல முக்காலும் ஆற்றுவதைக்
கற்றிவர் தேர்ந்தார் கலையென்றே – எற்றைக்கும்
வெள்ளை மனத்தர்; விரும்பிடுவார் தொண்டாற்றக்
கொள்ளையாய் நேசமே கொண்டு. (15)

கொண்டா(ர்) இவர்கொள்கை ''கும்பிடுவேன் பக்தரைத்
அண்டியே வீழ்வேன் அவர்பாதம் – கண்டிடேன்
இத்தரணி தன்னில் இதுவொப்பச் சேவை''யென
நித்தமும் பூசிடுவார் நீறு. (16)

நீறணிந்த நெற்றியர்; நேர்மையின் குன்றாவார்;
கூறுதற்(கு) ஒண்ணாக் குணமுடையார் – பேறுமிகப்
பெற்றார் இவர்பெருமை பேசிக் களித்திருப்பார்
கற்றார் அனைவரும் காண். (17)

காணும் இவருள்ளம் காலமெலாம் பக்தரைப்
பேணும் பணிதனில் பேரின்பம் – ஊனுடன்
நல்விருந்து பக்தர்க்கு நாளும் தவறாமல்
இல்தனில் வைப்பார் இனிது. (18)

இனிதாய் உரைத்திடுவார் இன்பமே கூட்டி,
முனிவும் தவிர்த்திடுவார் முற்றும் – கனிவுடனே
அப்பன் அடியார்பால் ஆற்றினார் தொண்டுபல
செப்பரும் சீலம் சிறந்து. (19)

சிறந்தவர் தாமென்று சிந்தியார் என்றும்
நிறைந்த பணிவினில் நிற்பார் – உறைந்திடுவார்
சின்னவுருக் கொண்டு சிவனடியார் முன்னரிவர்
அன்னதிவர் பெற்றி அறி. (20)

அறிந்த பெரியோர் அனைவரும் கூடிப்
புரிந்தார் பெயர்மாற்றம் பேணிச் – செறிந்த
''சிறுத்தொண்டர்'' நாமத்தைச் சீலர் அடைந்தார்
பொருத்தமாய் ஊரிடப் பெற்று. (21)

பெற்றோர் அளித்த பெயரும் மறைந்திடப்
பெற்றார் மறுபெயர் பின்னாளில் – உற்றார்
செவியில் அமுதூறச் செய்கின்ற நாமம்
புவியோர் அளிக்கப் புனைந்து. (22)

புனைவார் தவவேடம், போற்றுவார் தொண்டு
நினைவார் அதுவொன்றே நித்தம் – மனையில்
கரவாது சேவை களிப்புடன் செய்தல்
மறவாது கொண்டார் மனம். (23)

மனத்துக் கினியதோர் மங்கையும் ஓர்நாள்
இனித்திவர் வாழ்வில் இணைந்தாள் – அனைத்திலும்
அன்னார் நெறிகளுக்(கு) ஆதரவும் தந்(து)அவர்
பின்னால் உறைவாளப் பெண். (24)

பெண்காட்ட ஒப்பு பிறிதொன்று தேடுதல்
வெண்காட்டு நங்கைக்கு வீணென்பார் – பண்பாட்டின்
மொத்தவு(ரு) என்று முழுமனதா(ய்) அம்மாதை
நித்தம் புகழும் நிலம். (25)

நிலத்துறை தொண்டரை நீளப் பணிந்து,
கலத்தமு(து) ஈவார் களிப்பின் – குலத்ததன்
பேராள இல்லில் பிறந்தான் மகனென்று
சீராள தேவன் சிறந்து. (26)

சிறந்த குடும்பமாய்ச் சீலர் புவியில்
நிறைந்த நெறிகளில் நின்றார் – மறந்திடார்
முன்னம் அடியார்க்கு மீதூண் அளித்தபின்
தன்னை நினைவுறுவார் தாழ்ந்து. (27)

தாழ்வார் இவரும் தவசீலர் தாள்தன்னில்
வீழ்வார் பணிந்து வினயமுடன் – வாழ்வார்
மனைவி மகனுடன் மங்கலமாய்; இல்லில்
சுனையென ஊறும் சுகம். (28)

சுகம்தரும் தொண்டுபல சோர்வின்றி ஆற்றி,
அகமும் உவப்பார் அதனில் – சகமுழுதும்
கோலம் அதுகண்டு கூறிக் களித்திருக்கும்
சீலமுறு அன்னாரின் சீர். (29)

சீராளன் கண்டறியான் சிக்கனம் அன்பதனில்
தாராளம் தந்திட்டார் தாய்தந்தை – ஏராளம்
தொண்டில் சிறுத்தொண்டர் தூய மகிழ்வொன்றே
மண்டி இருந்தார் மனம். (30)

மனந்தனில் தூய்மை; மனைதனில் மாட்சி;
சினந்தென்றும் சீறாத சீலர் – தினந்தொறும்
அன்னம் அடியார்க்(கு) அளித்துக் களித்ததன்
பின்னரே உண்பார் பொறுத்து. (31)

பொருத்தமே சோடி புகழ்ந்திடும் பூமி
கருத்தும் ஒருமித்த காதல் – வருத்தமறப்
பாடு படுவார் பகலிரவாய்ப் பக்தர்க்குப்
பீடும் குறைவறப் பெற்று. (32)

பெற்ற பெருமையைப் பேருலகும் கண்டுவக்க
உற்றான் விருப்ப(ம்) உமைபங்கன் – முற்றாக
ஞாலம் அறிய நடத்திட நாடகக்
கோலம் தரித்தான் குளிர்ந்து. (33)

குளிர்ந்தமலை நீங்கியரன் கோலமுடன் வந்தான்
பளிங்குடல் பைரவராய்ப் பாரில் – தெளிந்ததோர்
வஞ்சமறு திட்டம் வடித்தந்த ஊர்தன்னைச்
செஞ்சடைச் சென்னியான் சேர்ந்து. (34)

சேர்ந்தான் சிவனும் சிறுத்தொண்டர் வாழ்கின்ற
ஊர்தனைத் தக்க உருவத்தி(ல்) – ஓர்ந்தவனும்
மன்பதைக்குத் தொண்டரின் மாண்பினைக் காட்டிடவே
அன்புடன் வந்தான் அவன். (35)

அவன்போட்ட திட்ட(ம்) அறியாத தொண்டர்
எவரின்று வந்திடுவா(ர்) என்று – கவலையுடன்
தேடி அலைந்தார் தினப்படி அன்னமிட
நாடி ஒருவரை நன்று. (36)

நன்றாகத் தொண்டரும் நாற்றிசை தன்னிலே,
சென்றன்று தேடினார் சீராக – அன்றூரில்
ஓரடியா(ர்) இல்லாமல் ஒக்க ஒளித்திட்டான்
நீரடை வேணியன் நேர்ந்து. (37)

நேர்ந்த நியமம் நிறைவேற்றத் தொண்டரும்
தேர்ந்தே அலைந்தார் தெருமுழுதும் – சோர்ந்தொருவர்
காணா வகையில் கலங்கினார் தம்விரதம்
கோணுமோ என்று குமைந்து. (38)

குமைகின்றார் தொண்டரும் கொள்ளொணாச் சோகம்
அமைகின்ற உள்ளத்த(ர்) ஆகி – உமைபங்கன்
செய்கின்ற சோதனையால் சோர்வும் மிகவுற்றார்
உய்வழி காணா(து) உழன்று. (39)

உழலும் சிறுத்தொண்டர் உள்ளம் மிகவும்;
தழலின் மெழுகாய்த் தவிக்கும் – விழலோ
விரதமும் இன்று விருந்துண்பா ரின்றி?
மறுகும் அவர்தம் மனம். (40)

மனம்கொண்டான் முக்கண்ணன் மக்களிவர் மாண்பை
இனம்கண்டு கொள்ளணு(ம்) என்று – தினமும்
விருந்துறும் பக்தரை வீதிகளி(ல்) அன்று
கரந்தவன் வைத்திட்டான் கண்டு. (41)

கண்டா(ன்) அவரைக் கவலை முகத்தினில்
கொண்டவராய் முற்றும் குலைவுறத் – திண்டாடி
அல்லல் உறுவாரை அப்படியே விட்டவர்
இல்லம் அடைந்தான் இனிது. (42)

இனிதாய்க் குடும்பத்தை இன்பத்தில் ஆழ்த்தும்
வனிதையும் கண்டாள் வருகை – கனிவுடனே
ஆசை மிகஉந்த அன்புட(ன்) இல்லத்து
வாசல் விரைந்தாள் வகுத்து. (43)

வகுத்தாள் விருந்தென்று வந்தவரை நங்கை
உகுத்தாள் முறுவல், உரைத்தாள் – அகத்துள்
வாரும்; விருந்து வழங்கிடும் பேறின்று
தாரும் எமெக்கென்று தான். (44)

தான்தோன்றி ஆனவர் தாரமொரு பாகத்தர்
வான்நீங்கி வந்தார், வினவினார் – ''தேன்மொழியே,
இல்லத் தலைவன் இருக்கின்றான் உள்ளென்று
நல்லதோர் செய்தி நவில்.'' (45)

நவின்றாள் மனையாளும் நம்பிஅய(ல்) என்று
செவியுறச் செப்பினாள் செய்தி – ''நவையில்லை
வாரு(ம்) அகத்துள்'' வரவேற்றாள் அம்மாது;
வேறேதும் கொள்ளாள் விழைவு. (46)

''விழைவது நான்கொள்ளேன்; வீட்டில்ஆண் இன்றி
நுழைவதும் இல்லை நுவன்றார் – ''பிழையதுவே!
வந்தது(ம்) என்னிடத்து வரச்சொல் கணவரை''
அந்தநெறி நின்றா(ர்) அவர். (47)

அவர்மேலும் சொன்னா(ர்) அகன்றிடும் முன்ன(ர்)
அவள்கணவர் சீலம் அறிந்து – ''நவையொழித்த
நல்லாரே உன்கணவர் நானிலத்தில் மெச்சியே
எல்லாரும் சொன்னார் இசைந்து.'' (48)

''இசைவு மிகக்கொண்டேன் இவ்வில்லில் உண்ண
நசையும் உடையேன்'' நவின்றார் – ''விசையுடன்
சொன்ன நெறிதன்னில் செய்து தருவீரேல்
இன்னமு(து) உண்டிடுவே(ன்) இங்கு''. (49)

''இங்குறும் முன்னர் இருந்தேன் வடநாட்டில்
எங்குமே கேட்டேன் இவர்புகழை – மங்கா(து)
அடியார் பசிதீர்க்கும் அன்புப் பணியை
நெடிதே புகழும் நிலம்.'' (50)

‘‘நிலத்தா(ர்) மதிக்கின்ற நேசரி(ன்) இல்லக்
கலத்தமு(து) உண்டு களிக்க – உலப்பின்றி
ஊரின் இறையகத்து உள்ளிருப்பேன்; உன்னவரை
நேரில் வரச்சொல் நினைந்து.’’ (51)

நினைவினில் வைத்து நியமமாய்ச் சொன்னாள்
மனையுற்ற தொண்டர்பால் மங்கை – புனைவின்றிக்
கேட்ட கணவர் கிளர்ந்தெழும் ஆர்வத்தால்
ஓட்டம் பிடித்தா(ர்) உடன். (52)

உடனுறைவாள் சொற்கேட்(டு) ஒருநொடியில் சென்று,
படபடக்கத் தொண்டர் பகர்ந்தார் – ‘‘தடையெதுவும்
சொல்லாது நீரின்று சோறுண்ண எம்முடைய
இல்லமே ஏகிடணு(ம்)’’ என்று. (53)

என்றவர் சொல்ல, இயம்பினார் பைரவரும்
‘‘நன்றிது கேட்பீர் நவில்வதை – இன்று
நரப்பசு ஊனொன்றே நானும் விழைவேன்
சிறப்போ(டு) அதுதாரும் செய்து.’’ (54)

‘‘செய்த(ல்) எளிதன்று; செப்பிடுவேன் முன்னமது;
பொய்யுரை இல்லை புகன்றதுவும் – அய்யா!
இதற்கோர் மறுப்பின்றி இப்போதே ஒப்பு
முதற்கண் அளிப்பீர் முனைந்து.’’ (55)

முனைப்பினில் தொண்டர் முகமும் மலர்ந்து,
நினைப்பதும் இன்றி நுவன்றா(ர்) – ‘‘அனைத்தையும்
ஒல்லை முடிப்பேன்; ஒடுக்கும் மறுப்பேதும்
இல்லை உணர்வீ(ர்) இது.’’ (56)

இதுகேட்டுப் பைரவரும் இன்முகத்த(ர்) ஆகி,
மதுர(ம்) உணர்வார் மனதி(ல்) – எதிர்பார்ப்பும்
பிள்ளைக் கறியென்று பேச்சோடு பேச்சாக
உள்ளம் திறந்தார் உரைத்து. (57)

உரைத்ததைக் கேட்டு உவப்புற்றார் தொண்டர்.
மறுத்துரை சொல்லாத மாண்பின் – ''பொறுத்திடுவீர்
சின்னேரம் தன்னிலிதைச் செய்திங்கு மீண்டிடுவேன்''
அன்னதே சொன்னார் அவர். (58)

அவரு(ம்) அகம்செல்லும் ஆறதனில் கொண்டார்
எவருமே கொண்டிடா எண்ணம் – தவறின்றி
இல்லாள் செவியுற இன்முகம் கொண்டவரா(ய்)
எல்லா(ம்) உரைத்தா(ர்) எடுத்து. (59)

''எடுப்போம் விருந்தும் இறையடியார்க்(கு) இல்லில்,
கொடுப்போ(ம்) உளமும் குளிர – துடிப்புடனே,
அன்னார் எனக்குரைத்த ஆணை அனைத்தையும்
பன்னுவேன் உன்னிடத்துப் பார்.'' (60)

''பாரிலிது நாள்வரையில் பார்த்தறியேன் இவ்விருப்பு
நேரிலவர் சொல்ல நினைவுற்றேன் – கூறிடுவேன்
பண்புடையார் சொன்ன பலசேதி மற்றுனக்(கு)
அன்போ டதுசெய்யு(ம்) ஆறு.'' (61)

''ஆறும் பசியவர்க்(கு) ஆண்டிற் கிருமுறைதான்
மாறுத(ல்) இல்லை மனையாளே! – சோறுடனே
உண்ணுதற்குப் பசுவூன் உவந்திங்கு கேட்கின்றார்
கண்ணுதலான் பக்தருமே காண்.'' (62)

‘‘காண்பா(ய்) பைரவரும் கட்டளையாய்ச் சொன்னபல;
வீண்பழி கொள்வோம் விலக்கிட்டால் – மாண்புமிகு
அன்னார் பகன்றார் அதுவும் நரப்பசு;
பின்னரும் சொன்னார் பிற.’’ (63)

‘‘பிறகும் பசுபற்றிப் பேசியவை சொல்வேன்
அறிவாய் அகவையு(ம்) ஐந்து – நிறைமனத்(து)
அன்னை பிடித்திட அப்ப(ன்) அரிந்திடணும்
சொன்னதும் கொண்டேன் செவி.’’ (64)

‘‘செவியுறப் பைரவரும் செப்பினார் பின்னர்;
கவினுற என்னிரு காதில் – நவையில்லா
அம்மையே! பிள்ளை அமைந்திடணும் ஓர்மகவாய்ச்,
செம்மை உடையாரின் சொல்.’’ (65)

‘‘சொல்லியவை கேட்டபின் சோர்வும் ஒழிந்திட
ஒல்லையில் தீர்வொன்றை ஓர்ந்தேன்நான் – இல்லிலுறை
சீராளன் மைந்தன்பால் சீராய் நிபந்தனைக்(கு)
ஏராளம் கண்டே(ன்) இசைவு.’’ (66)

இசைந்த மனையாளும் இன்முகம் கொண்டு
விசையுறு பந்தாய் விரைந்தாள் – நசையுடன்
ஆதிமுதல் தொண்டில் அவளும் துணைநிற்கக்
கோதின்றிக் கொண்டாள் குணம். (67)

குணக்குன்றாம் அன்னை குளிப்பாட்டிச் சேயை
மணக்க அளித்து மகிழ்ந்தாள் – இணக்கமுடன்
ஒப்பிலாப் பைரவ(ர்) ஓர்ந்து நிபந்தனையாய்ச்
செப்பியவை ஏற்றாள் சிரம். (68)

சிரத்தைத் தவிர்த்துச் சிறுவனின் அங்கம்
சிரத்தைமிகக் கொண்டு சீராய் – அறுத்துக்
கறியாக்கி ஆங்குக் கலந்தனில் அன்பு
நெறியினில் வைத்தார் நினைந்து. (69)

நினைவினில் கொண்டார்; நிபந்தனை எல்லாம்
மனைவியும் ஒன்றும் மறவார் – வினைதன்னை
வேகம் முடித்து விரைந்திட்டார் மாதொரு
பாகன் அடியார்தம் பால். (70)

பாலகன் ஊனைப் பசியாறத் தந்தவரின்
சீலத்தை வார்த்தைகள் செப்பிடுமோ ? – ஆலத்தைக்
கண்டத்தில் வைத்தவன் காத்திருந்தான் தொண்டருடன்
உண்டிடச் செல்ல உகந்து. (71)

உகந்த சிறுத்தொண்டர் ஊர்க்கோவி(ல்) உற்றுப்
பகன்றார்; அடியில் பணிந்தார் – ''அகன்றிடுவீர்;
இல்லம் மறுக்காமல் ஏகிடுவீர் உண்பதற்(கு)
ஒல்லை வருவீர் உடன்'' (72)

உடனில்லம் வந்தாரை உள்ளழைத்துத் தக்க
இடந்தன்னி(ல்) இட்டா(ர்) இருக்கை – கடனறிந்(து)
அன்ப(ர்) அடியை அனைவரும் கும்பிட்டார்
துன்ப(ம்) அனைத்தும் துடைத்து. (73)

துடைத்து இலையிட்டார்; தூய அமுதும்
படைத்து மகிழ்ந்தார் பணிந்து – விடைத்தார்
விருந்தென வந்தவரும் வேட்கையுடன் கேட்டார்
அருந்தத் தலைக்கறியை ஆங்கு. (74)

ஆங்(கு)இலை தன்னில் அனைத்தையும் அம்மாது,
பாங்கின் படைத்ததைப் பார்த்தபின் – ஓங்கு
சினத்தொடு பைரவர் சீறிடத் தொண்டர்
மனத்திடைக் கொண்டார் மருள். (75)

மருளெதிர் பார்த்தே மனங்கொள் தாதி
அருளுடன் சமைத்தாள் அதையும் – இருளகலக்
கள்ளமறு தாதி கறியென ஆக்கியே
தள்ளாது வைத்தாள் தலை. (76)

தலைக்கறியைத் தப்பாமல் தாதி கொணர்ந்து
இலையதனில் இட்டாள் இனித்து – குலைநடுக்கம்
போயொழிய இல்லாளும் போற்றினாள் நன்றியுடன்
தாயன்பு மிக்காளைத் தான். (77)

தான் மட்டும் உண்ணேன் தனிஎன்று பைரவர்
ஊனை மறுத்தார் உடனாங்கு – மானொத்த
மங்கை கணவரும் மாளாத சோர்வுற்றார்
எங்ஙனம் தீருமிது என்று. (78)

என்றுமிக இன்னல் இழைத்தாங்குப் பைரவர்
கொன்றிடும் வார்த்தைபல கூறினார் – ''ஒன்றி
உடனுண்ணப் பக்த(ர்) ஒருவர் கொணர்தல்
கடனுமக்(கு)'' என்றறைந்தார் காண். (79)

''காண்பேன் அடியாரைக் கட்டாயம் மீண்டிடுவேன்
வீணுரை அன்றெ''ன வீதிசென்றார். – மாணுடனே
ஓராளும் காணா(து) ஒளித்திட்டான் மீண்டுமே
பாராளும் பிஞ்ஞகனும் பார்த்து. (80)

பார்த்தெங்கும் தேடிப் பலனின்றி இல்லுற்று,
வேர்த்த உடலராய் வீழ்ந்திட்டார் – ''சீர்தவத்தீர் !
ஏற்றிடுவீர் என்னை அடியாரா(ய்)'' என்றுரைத்துப்
போற்றினா(ர்) மிக்கப் பணிந்து. (81)

''பணிவும் மிகவுடையேன்; பக்தரடி வீழ்வேன்;
கனிவுறும் சொல்லுரைப்பேன் கண்டீர் – முனிவின்றி
என்னையும் ஒப்பிடணும்'' என்றடி வீழ்ந்தவரும்
பன்னினார் பாதம் பணிந்து. (82)

பணிந்தவரைப் பக்குவமாய்ப் பார்த்துப் பரமன்
குனிந்தெடுத்தான் உள்ளம் குளிர்ந்து –முனிவகற்றிப்
பக்கம் அமரப் பரிவுடன் கூறினான்
சிக்கலை மேன்மேலும் சேர்த்து. (83)

சேர்ந்தே அமர்ந்துதன் செல்வனின் ஊனுண்ண
நேர்ந்ததே என்று நிலைகுலையார் – ஓர்ந்ததெலாம்
அன்னார் விருந்து அடிக்கடி பங்கமுறல்
உன்னுமது ஒன்றே உளம். (84)

உள்ளம் நினைந்தார், உவந்த பணிஒன்றே;
தள்ளுவார் மற்றைத் தவசீலர் – கொள்ளும்
கவலைமிகு தொண்டர் கலத்தில்கை வைக்க
அவரும் தடுத்தாரவ் வாறு. (85)

''ஆறும் பசியு(ம்) அரையாண்டிற் கோர்முறையே
போறு(ம்) எனக்குப் புகன்றிட்டேன் – சோறுதனைக்
கண்டது(ம்) இங்குக் கணமும் பொறுக்காமல்
உண்டிடல் நன்றோ உரை?'' (86)

''உரைப்பதைக் கேளும்நீர், உம்மைப்போல் வேகம்
தெறித்திட உண்பாரோ தேவை ? – மறுத்திடுவேன்
உம்முட(ன்) உண்ண; உடனுண்ண எம்மருகில்
உம்மகன் வேண்டும் உடன்'' (87)

''உடனென்(ன்) அருகமர்ந்(து) உண்ண மகனை
உடனிங்(கு) அழையும் உரைத்தார் – கடனிதைக்
கட்டாயம் செய்வீர், கணங்கூடத் தாழ்த்தாதீர்''
திட்டமாய்ச் சொல்லிவிட்டார் தீர்த்து. (88)

தீர்க்கவழி தோன்றாமல் திக்கித்(து) அவர்நின்றார்
போர்க்களம் தாராப் புதிரன்றோ! – யார்க்குமே
சிந்திக்க ஒண்ணாத சோதனையைத் தன்னடியார்
சந்திக்க வைத்தான் சிவன். (89)

சிவனடிப் பைரவர் செப்பிய செய்கை
அவனியி(ல்) ஆகா(து) அறிவார் – ''அவனிங்(கு)
உதவான்'' எனத்தொண்டர் உண்மை உரைத்தார்
பதமாகப் பாதம் பணிந்து. (90)

பணிவினைப் பைரவர் பாரார்; அவர்தம்
முனிவினைக் காட்டும் முகமும் – துணிவுடனே
வாசலுக்கு வந்ததொண்டர் வாயாரக் கூப்பிட்டார்
நேச(ம்) உளத்தில் நிறைந்து. (91)

நிறைந்த குணமுடையார் நீள அழைக்கப்
பறந்தங்கு வந்தானப் பையன் – கரந்திடான்
பள்ளியின் நீங்கிவரும் பாலகனாய்ச் சீராளன்
துள்ளியரு(கு) உற்றான் துடித்து. (92)

துடித்தார் மகிழ்வில் துயர்தீர்ந்த பெற்றோர்
மடித்தலம் வைத்தார் மகனைப் – பிடித்தார்
நெஞ்சாரப் பிள்ளையை நேசம் பெருகிடப்
பிஞ்சின்மே(ல்) ஆகினார் பித்து. (௯௩)

பித்து(ம்) அகன்றிடப் பிள்ளை உடன்வர
இத்தரணி காணா இயல்பாரும் – சித்தித்த
நற்பணி உன்னியே நாடி அகத்துறக்
கற்சிலை ஆனாரே கண்டு. (௯௪)

கண்டிட வில்லை கறியும் இலையதுவும்
உண்டிட வந்தாரும் உள்ளில்லை – தொண்டரும்
மாய(ம்) அறியார், மலைத்தார்; மனங்கொண்டார்
நேய(ம்) உடையான் நினைவு. (௯௫)

நினைவுறத் தோன்றினான் நீலநிறக் கண்டன்
மனைவி மகனொடு மாண்பில் – அனைத்தும்
நனிசிறக்கச் செய்தவனும் நற்கயிலைக் காட்சி
இனிமையின் தந்தா(ன்) இசைந்து. (௯௬)

இசைவா(ர்) எதற்கு(ம்) இறையடி கேட்டால்
நசையோ(டு) அதுசெய்வார் நாளு(ம்) – அசைவின்றிக்
கொண்டதம் கொள்கையில் குன்றென நின்றதைக்
கண்டருள் செய்தான் கனிந்து. (௯௭)

கனிவுடன் சொன்னான் கயிலை உறைவான்
''இனியுமக்கு வாழ்வில்லை இங்கு – நனிசிறந்த
செம்மைக் குடும்பமாய்ச் சேர்ந்தநற் தாதியுடன்
எம்மை அடைந்திங்(கு) இரும்.'' (௯௮)

இருக்கை அடைந்தார் இறைவ(ன்) அருகில்
செருக்கேதும் கொள்ளாத சீலர் – சிறக்கின்ற
தொண்டென்ற சொல்லுக்குத் தூய இலக்கணம்
கண்டதில்லை ஈதொப்பக் காண். (99)

காண்ப(து) அரிதுமிகக் கற்பனை செய்தாலும்
மாண்புறு செய்கையினி மற்றொன்று – நோன்பென
உற்ற நியமத்தை ஊறுபல வந்திடினும்
முற்றும் முடித்தார் முனைந்து. (100)

நூற் பயன் :

*நாயன்மார் நற்காதை நாளும் நவில்வோரைப்*
*போயடையும் முற்றாகப் புண்ணியமே – காயமிதை*
*விட்டாவி போகுங்கால் வீடு(ம்) உரைப்பார்க்குக்*
*கட்டாய(ம்) உண்டிங்குக் காண்.*

சிறுத்தொண்ட நாயனார் புராணம் முற்றும்.

# கண்ணப்ப நாயனார் புராணம்

*(சிங்கப்பூரில் 25-07-2010 ஞாயிறு காலை, 30ஆவது திருமுறை மாநாட்டில் அறுபத்து மூவர் குருபூசை விழாவின் ஓர் அங்கமாகத் திருமுறைக் கவியரங்கத்தில் படித்தது.)*

## காப்பு

பாட்டெழுத வந்தேன் பரிவுமிக வென்பால்
காட்டுவா(ய்) அய்யா கணபதியே – வாட்டமறக்
கூப்புவேன் கையுனக்குக் கூறும் கவிக்கெல்லாம்
காப்பென் றிருப்பாய் கனிந்து. (1)

அணியும் தொடையும் அழகாய் அமையப்
பணிவேன் கணபதியின் பாதம் – பிணியகலத்
தும்பிக்கை நாதன் துணையன்றி வேறெனக்கு
நம்பிக்கை உண்டோ நவில். (2)

## வெண்பாக்கள் (104)

சீலத்தின் உச்சம்; சிறிதே அளவெனினும்
கோலத்திற்(கு) ஆங்குக் குறைவில்லை– ஞாலத்தில்
பொத்தப்பி நாட்டின் புகழுக்கும் சீருக்கு(ம்)
ஒத்தது வேறில்லை உணர். (1)

கரிதரு தந்தத்தால் கட்டுவார் வேலி
உரிமையி(ன்) எல்லை உணர்த்திச் – செறிவுடனே
வாழு(ம்) உடுப்பூர் வளம்நிறை வேடர்க்குச்
சூழு(ம்) எதிலும் சுகம். (2)

பொத்தப்பி வேடரெலாம் போற்றும் தலைவனாய்,
எத்தரப் பார்க்கு(ம்) இனியனாய் – சித்தத்தில்
மக்களின் நன்மை மறவாமல் எண்ணியதால்
சிக்கலின்றிப் பெற்றான் சிறப்பு. (3)

நாகன்எனும் பெயரான் நாட்டோர் வியக்கின்ற
வேகத்திறங் கொண்ட வில்லாளன் – சோகமிலா
வேடுவர் கூட்டத்தின் வெற்றித் தலைவனாய்
மாடுற வாழ்ந்தான் மகிழ்ந்து. (4)

தத்தைஎனும் மங்கை தாரமாய் வாய்த்திடத்
தித்திக்கும் வாழ்வில் திளைத்தாலும் – முத்திட்டுக்
கொஞ்ச மகவின்றிக் கூறொணாத் துன்புற்றான்
நெஞ்சிற் கவலை நிறைத்து. (5)

காசினியின் செல்வம் கணக்கின்றிப் பெற்றாலும்,
ஆசைக்கோர் செல்வன் அவர்க்கில்லை – பூசித்தார்
ஆறுமுகன் தாளில் அழுதார் தமக்குமகப்
பேறினை வேண்டிப் பிழிந்து. (6)

பாலகன் வேண்டிப் பணிந்த அவருக்கு
வேலனருள் செய்தான் விரைவாகச் – சூலுற்ற
அன்னை உயிர்ப்பித்தாள் ஆண்மகவை மால்மருகன்
என்னை உயர்வித்தா(ன்) என்று. (7)

வண்ணக் குழவியை வாங்கிய நாகனதன்
திண்ண(ம்) உணர்ந்து திகைப்புற்றான் – எண்ணத்தில்
தேர்ந்தான் மகனுக்குத் திண்ண னெனும்பெயர்
ஓர்ந்தது வைத்தா(ன்) உடன். (௮)

பல்வித்தை பாடமாய்ப் பாலன் பயின்றாலும்
வில்வித்தை தேர்ந்தான் விருப்புற்று – நல்வித்தை
கற்றான் மகனும் கலையென்று வேட்டையைப்
பெற்றா(ன்) அதில் நற்பெயர். (௯)

தக்க வயதில் தலைவனாய்த் தன்மகனைப்
பக்குவமாய் நாகன் பரிந்துரைத்தான் – எக்கணமும்
மூப்புற்ற தன்னுடல் முற்றாய் விழுமுன்னர்,
காப்பெனத் திண்ணனைக் கண்டு. (10)

தேட்டை மிகவுடைய திண்ணன் தலைவனாய்
வேட்டை துவக்கினான் வீரருடன் – காட்டினுள்
மானை அடித்தபின் மற்றும் புலிகரடி
ஆனையும் வீழ்ந்த(து) அவண். (11)

எல்லா விலங்கும் இவனம்பால் வீழ்ந்து படப்
பொல்லாத(து) ஒன்றும் புகுந்தது – நில்லாமல்
ஆங்கொரு பன்றி அவன் முன்ன(ர்) ஓடியது
தாங்கொணா வேகம் தரித்து. (12)

ஓடிய பன்றியை ஓர்கணத்தில் பற்றிடத்
தேடியே ஏகினான் திண்ணனுடன் – சாடியே
காட்டைக் கலக்கியது காற்றாய்ப் பறந்தோட,
வேட்டை தொடர்ந்தான் விரைந்து. (13)

சிலையின் கணைகளில் சிக்காமல் வேகம்
குலையாம(ல்) ஓட்டம் குறித்து – மலையடியில்
நின்ற அப்பன்றியை, நீண்டதோர் வாள்கொண்டு
கொன்றா(ன்) உயிரைக் குடித்து. (14)

காடனொடு நாணன் கணமு(ம்) உடனிருப்பார்,
கூடவே வந்தார் குதித்தோடி – வேடுவரி(ல்)
ஏனையர்க்(கு) அவ்வேக(ம்) ஏலாமற் போனதா(ல்)
ஆனார் தனிமூவ(ர்) ஆங்கு. (15)

''கொன்றாயிப் பன்றியைக் கூருடைஉன் வாளால்,
தின்று பசியினைத் தீர்த்திடுவோம்'' – என்றங்குக்
காட(ன்) இயம்பக் கணத்தில் செயலாக்கம்
நாடினான் திண்ணன் நயந்து. (16)

''தண்ணீ(ர்) அருகுளதோ தாகம் தணித்திடத்''
திண்ணன் தன்வேட்கை தெரிவித்தான் – ''வண்ணமுறு
பொன்முகலி ஆறுளது போவோ(ம்)'' என நாணன்
முன்வழி சென்றான் முனைந்து. (17)

தந்தையுட(ன்) அம்மலைக்குத் தான்முன்ன(ர்) ஓர்முறை
வந்ததாய் நாணன் வழிபகன்றான் – ''வந்தனைகள்
செய்வோம் மலையுச்சிச் சேர்ந்தங்(கு) உறைபவர்க்கு,
உய்வோ(ம்) அதனா(ல்) உணர்.'' (18)

''குடியிருப்பா(ர்) உச்சி குடுமிக் கடவுள்,
படியேறிச் சென்றவரைப் பார்ப்போம் – அடிபணிவோம்''
பன்னியது கேட்டுப் பரிவுடன் திண்ணனும்
முன்னம் விரைந்தான் முகிழ்ந்து. (19)

கூறுதற்(கு) ஒண்ணக் குதூகலம் கூடிட
மாறுத(ல்) உள்ளே மலர்ந்திட – ஏறும்
மலையின் அருகினில் மண்டிடும் போதே
அலையாய் உளமெழுந்த தன்பு. (20)

இன்ன வகையென்(று) இயம்பவொணா ஓர்சக்தி
தன்னை இயக்குதல் தானுணர்ந்தான் – முன்னரே
கொண்டிருந்த பந்தமோ கூற இயலாமல்
அண்டிமலை உற்றா(ன்) அவன். (21)

''பன்றியைக் காடா, நீபக்குவம் செய்துபின்
நன்று சமைத்திடுவாய் நாவினிக்க– ஒன்றுமென்
உள்ளம் மலையின்மே(ல்) ஓர்நொடியி(ல்) ஏறுவதில்;
கள்ள(ம்) இதிலில்லை காண்.'' (22)

நாணன் வழிகாட்ட நண்ணினான் திண்ணன்பின்
காணும் விருப்புக் கரையின்றிக் – கோணாமல்
ஓடினா(ன்) உள்ள(ம்) உவப்புக் கடலாட
ஆடினா(ன்) உச்சி அடைந்து. (23)

குடுமிக் கடவுளைக் கும்பிட்டான் திண்ணன்
அடிமனத்(து) ஊறுகின்ற அன்பால் – வடிவத்தைப்
பற்றி அணைந்தான்; பணிந்தான் பலவாறாய்;
வற்றாமல் கண்ணீர் வடித்து. (24)

''காணு(ம்) இவர்முன் கவின்கொள் மலருடன்
ஊனும் பலவகையா(ய்) உள்ளனவே! – நாணனே
ஆருடைச் செய்கை அறிந்தால் விவரத்தைக்
கூறு(உ)ன் நினைவு குவித்து.'' (25)

‘‘அந்தணர் மாலை அணிவித்(து) உடனுணவும்
தந்தபின் ஆண்டவன் தாள்வீழ்ந்தார் – தந்தையுடன்
ஓர்முறை வந்தே(ன்) ஒளிந்திருந்து கண்ணுற்றேன்’’
நேர்முறை சொன்னான் நினைந்து. (26)

கண்டான் குடுமிக் கடவுளைத் திண்ணனுடன்,
கொண்டா(ன்) உவகை குறைவின்றி – அண்டியே
ஆரத் தழுவினன்; அன்பொன்றே உள்ளத்தில்
சேரப் பகன்றான் சில. (27)

‘‘இச்சைக் குரியவரே! இன்றெனக்(கு) இம்மலையில்
அச்சோ! வசமாய் அகப்பட்டீர் – நிச்சயமாய்
நீரே நிறைந்திருப்பீர் நெஞ்சில் நிலையாக;
வேறேதும் வேண்டேன் விருப்பு.’’ (28)

கட்டி அணைத்தான்; கதறினான் தாள்பற்றி;
விட்டுப் பிரியேன் விளம்பினான் – மட்டில்லாப்
பேரின்பம் கொண்டவனாய் பின்னு(ம்) அவரிடத்துக்
கூறினா(ன்) உள்ளம் குமைந்து. (29)

‘‘தன்னந் தனியீர்! தவிக்கின்றீர் யாருமின்றி
இன்னமுதம் ஈவாரு(ம்) இங்கில்லை – முன்னருமைக்
காணாது காலம் கழித்தே(ன்) இனியும்மைப்
பேணாது போகேன் பெயர்ந்து.’’ (30)

‘‘உண்ணு(ம்) உணவு(ம்) உடன்பருகத் தண்ணீரும் ,
வண்ணமுறத் தந்து வழிபடுவேன் – எண்ணத்தில்
கொண்ட உறுதியில் கொஞ்சமும் நான்தவறேன்,’’
விண்டது சொன்னான் விரைந்து. (31)

அலையலையா(ய்) உள்ளத்தி(ல்) ஆர்வ(ம்) எழும்ப
மலையிறங்கிப் போனான் மகிழ்வுற்(று) – உலைவின்றி
ஊனை அவருக்(கு) உடனே படைத்திட
மானாய்ப் பறக்கும் மனம். (32)

''காட்டி(ல்) உறைவாரைக் கண்டே(ன்) அதன்பின்னர்
வீட்டிற்குப் போகேன்'' விளம்பினான் – ''நாட்டமெலாம்
உற்றே(ன்) அவர்பா(ல்) உவந்து பணிசெய்யப்
பெற்றே(ன்) இதுவன்றோ பேறு!'' (33)

''மாற்றுவா(ய்) இம்முடிவை'' மண்டியிட்ட நாணனைத்
தேற்றுவான் திண்ணன் திறம்பட – ''ஆற்றிடத்
தொண்டுபல உண்டு தொடர்ந்திங்கு நானாற்றக்
கண்(டு)அவை செய்வேன் களித்து.'' (34)

திருத்திட எண்ணுவான் திண்ணனை நாணன்,
கருத்துடன் நீங்கினான் காடு – பொருத்தமாய்
நாகன்பால் சொன்னான் நடந்த அனைத்தையும்
சோகத்தால் உள்ளமிகச் சோர்ந்து. (35)

வேட்டை இடத்து விளைந்த நிகழ்வெல்லாம்
கேட்டதும் தந்தை கிலியுற்றா(ன்) – ஒட்டமாய்
உச்சி அடைந்தான்; உணர்ந்தான் மகனுறுதி;
அச்ச(ம்) அழிந்தான் அவன். (36)

எல்லோரும் நீங்கிட ஏகினான் திண்ணனும்,
ஒல்லை பசிபோக்க ஓடினான் – நல்லகறி
ஏதென்று சோதித்(து) எடுத்தான் கடவுட்கு,
தீதில்லா நல்ல திறத்து. (37)

தக்கதோ ஊனும்? தரவு(ம்) உகந்ததோ?
பக்குவம் தானோ பரிமாற? – அக்கறையாய்
வாயிட்(டு) அதக்கி வகைசெய்(து) அனைத்தையும்
தாயினி(ன்) ஓர்ந்தான் தரம். (38)

நல்லதோ மாமிசம்? நாவிதை ஒப்புமோ?
பல்லால் கடித்துப் பதம்பார்த்தான் – ஒல்லை
புசித்துப் பிரித்த புலாலை நிறைத்தான்
பசித்தொல்லை போக்கப் பரிந்து. (39)

பன்றிக் கறியதன் பக்குவம் தேர்ந்தபின்
தின்றிடக் கொண்டுவந்தான் திண்ணனதை – ஒன்றியே
உண்ணக் கொடுத்தல் ஒழித்துப் பிறிதொரு
எண்ணத்திற் கில்லை இடம். (40)

தூய மனத்தன் துயரகற்றும் பண்பினன்
வாய்முழுதும் நீரொடும் வந்தனன் – காயுமே
நாதன் வயிறென்று நண்ணினான் நெஞ்சத்தில்
கோதறும் அன்பு குவிந்து. (41)

இலையும் மலரு(ம்) எடுத்தான்; பறித்துத்
தலையி(ல்) அவற்றைத் தரித்தான்; – மலையின்
உயரம் கடந்தா(ன்); உறுத்தும் பசியாம்,
துயரம் களையத் துடித்து. (42)

செருப்பணிந்த கால்கொண்டு சீராக்கும் சேவை
விருப்புடன் செய்தான் விரைந்து – பொருப்புறை
நாதன் பணிதன்னில் நாளெல்லாம் போக்குதல்
போதுமெனக் கொண்டான் புகல். (43)

வாய்நீர் வடித்து, வகையாய்க் குளிப்பாட்டி,
தூய்மைப் படுத்தித் துடைத்தபின் – தாய்மையின்
அன்புற்றுத் திண்ண(ன்) அமுதக் கறிபடைத்தான்,
இன்புற்றுச் செய்தா(ன்) இது. (44)

''அய்யா! இது உண்பீ(ர்)'' அன்புடன் வேண்டினான்
மெய்யன்றி வேறு மொழிந்திடான் – பொய்யில்லாத்
தொண்டு புரிவதில் தூயநற் பேருவகை
கொண்டா(ன்) உளமும் குளிர்ந்து. (45)

மாலை மறைய மனமொப்பி மற்றொரு
வேலை தொடர்ந்தான் விரைவாகக் – காலைவரைக்
காவலெனத் திண்ணனும் காளத்தி நாதருக்(கு)
ஆவலுடன் நின்றா(ன்) அயல். (46)

வில்லேந்து கையன் விழிமூடா வேட்டுவன்;
அல்லெல்லாம் நின்றா(ன்) அயர்வின்றி – எல்லையறு
பாசத்தால் காவற்பணி செய்தான் தன்னெஞ்சை
நேசத்தால் திண்ணன் நிறைத்து. (47)

கதிரவன் வானத்தில் காட்சிதரும் முன்னர்க்
குதித்தோடிச் சென்றான் குமரன் – துதிக்கும்
குடுமிக் கடவுளின் கும்பிக்(கு) அளிக்கப்
படுத்தான் மிருகம் பல. (48)

அந்தணர் தம்கடமை ஆற்ற மலையேறி
வந்தணைந்தா(ர்) அன்று வழக்கம்போல் – நொந்தார்
விடையவன் சன்னிதியில் வீழ்ந்திருந்த ஒவ்வாப்
படைய(ல்) அனைத்தையும் பார்த்து. (49)

அவமானம் செய்தவர் ஆரென் றறியாச்
சிவகோ சரியார் சினந்தார் – சிவன்முன்னர்
கண்ட அவலம் கணத்தினில்நீக்கினார்;
மண்டிடச் சோகம் மனத்து. (50)

இறைவ(ன்) உறையு(ம்) இடத்தில் மிகுந்த
குறைகள் நிகழக் குமைந்தார் – மறையவரும்
நாற்றிசை சென்றார் நடந்த(து) அறிந்திடச்
சீற்றத்தால் மேனி சிவந்து. (51)

சித்த(ம்) உறையவைக்கும் சீர்கேடு கண்டுடனே
சுத்த(ம்) அவர்செய்தார் சூழலுக்(கு) – நித்தம்செய்
பூசனை யோடு புனிதப் பரிகாரம்
ஈசன் முன்செய்தா(ர்) இசைந்து. (52)

தப்புச் செயல்கண்டு தாழ்ந்தார் தலையுமவர்
செப்பவு(ம்) ஒண்ணாச் சிறுமையென – அப்பனாம்
ஈச(ன்) அருகி(ல்) இறைச்சி எலும்பெலாம்
வீசியது கண்டுள்ளம் வெந்து. (53)

நாளும்செய் பூசையெலாம் நன்றா(ய்) இறைவனின்
தாளுக்குச் செய்தார் தவசீலர் – தோளுக்குச்
சாற்றினார் பூமாலை; சந்தமிகு மந்திரத்தால்
போற்றினார் பெம்மான் புகழ். (54)

மாம்பழம், வாழையுடன் மற்றும் கனிபடைத்(து)
ஓம்பலவாம் மந்திரங்கள் உச்சரித்துத் – தாம்கொணர்ந்த
சோறும் படைத்தார்; தொடர்ந்தசிவ பூசையினால்
ஆறுதல் கண்டா ரவர். (55)

அன்றாடப் பூசை அழகுறச் செய்தாலும்
நின்றாடும் நெஞ்சில் நிகழ்ந்தவை – சென்றடைந்தார்
தள்ளாடும் மேனித் தவசீலர் தம்மில்ல(ம்)
உள்ளாடும் துன்ப(ம்) உறைந்து. (56)

அந்தணர் செய்கையு(ம்) அவ்வா(று) அமைந்திட
வந்தனன் திண்ணன் வழிபட– முந்தைய
நாளது போலவே நற்சுவை ஊனெலாம்
கோளற வைத்தான் கொணர்ந்து. (57)

சென்றதினம் போல்திண்ணன் சேகரித்தான் ஊனெல்லாம்
நன்றவை தேர்ந்தான் நயமுடனே – சென்றடைந்(து)
உண்ணக் கொடுத்தா(ன்) உடனிருந்தான் காவலெனக்
கண்ணி(ல்) உறக்கம் களைந்து. (58)

ஐந்து தினமா(ய்) அவைநிகழ அந்தணர்
நொந்தார் மனமும் நினைவழிய – உந்திடும்
சோகத்தால் கோசரியார் சொன்னார் உமையொரு
பாகத்தான் தாளில் பணிந்து. (59)

''வேதனை என்னை விழுங்குது நாள்தோறும்,
சோதனை ஈதென்ன சொக்கனே! – நாதனே!
இச்செயலைச் செய்தார் இவரென்(று) உரைத்திடணும்
நிச்சயம் இன்றெனக்கு நீ.'' (60)

''வந்தனைகள் செய்து வழிபடும் சன்னிதியில்
நிந்தனைகள் யாரோ நினைந்தாரே? – சிந்தைதனில்
இந்தவிதம் மாசுற்றார் யாரென்(று) இறைவாநீ
எந்தவிதம் சொல்வா(ய்) எனக்கு?'' (61)

அந்தணர் கேட்டதற்(கு) ஐயன்பதில் சொல்லத்
தந்தான் கனவில் தரிசனமும் – ''நிந்தனை
என்றுநீ எண்ணாதே! ஏற்கின்றேன் இன்பமுடன்
நன்றென்றே இச்செயலை நான்.'' (62)

''மாசில்லா நல்ல மனமுடையான்; என்றன்பால்
ஊசிமுனைத் துன்பம் உறப்பொறான். – காசினியில்
என்பால் திருதொண்டும் யாரிவன்போற் செய்திடுவார் ?
அன்பா(ல்) உயர்ந்தா(ன்) அறி.'' (63)

''அன்பின்றி வேறொன்(று) அறிந்திடாத் தொண்டனிவன்,
என்பதை உள்ளத்தி(ல்) ஏற்றிடுவாய் – துன்பமுறின்
போக்குதற்(கு) ஏதும் புரிவா(ன்) இவன்கொண்டான்
நீக்கமறக் காதலுறும் நெஞ்சு.'' (64)

''உன்னொத்த ஆசாரம் உள்ளவன் இல்லையெனின்
என்னிடத்துக் காதலோ ஏராளம் – பன்னிடப்
பாசுரம் எல்லாம் பயின்றிடா(ன்) என்றாலும்
நேசம் மிகுந்ததிவன் நெஞ்சு.'' (65)

''தனக்குப் பிடித்தவை தந்திடுவான் நாளும்
எனக்கு(ம்) அவைபிடிக்கு(ம்) எண்ணி. – மனத்தினில்
மாறாத அன்பின்றி மற்றேதும் கொள்ளாதான்;
வேறாக எண்ணல் விடு.'' (66)

''அவன்செய(ல்) எல்லா(ம்) அடியேன்பா(ல்) அன்பு;
அவன்கொ(ள்) அறிவு(ம்) அதுபோ(ல்) – அவனுடைய
எண்ண(ம்) அனைத்துமே என்மீ(து) எனவாகும்
திண்ணமிது கூறுவேன் தேர்ந்து.'' (67)

"செருப்பணிந்த காலென்றன் சென்னி துலக்க,
விருப்பின்றிக் கொள்வேனோ வேறு – மறுப்பில்லை;
கந்தன் சிறுவயதில் காலென் தலைவைப்பான்
அந்தவிதம் ஏற்பே(ன்) அது." (68)

"வாய்நிறைய நீர்கொண்டு வார்ப்பா(ன்) அதுதன்னைத்
தூய்மைமிகு கங்கையெனத் துய்க்கின்றேன் – போய்க்கொணரும்
ஊனும் அவியே; உவந்தே தினம்தோறும்
நானும் சுவைக்கின்றேன் நன்று." (69)

"மாலு(ம்) அயனும் மகிழ்வுடன் சூட்டுதல்
போலவே எண்ணியிதைப் போற்றுவேன் – தோலணிவான்
அண்டிச் சொரிகின்ற அன்பு மலர்களை,
மண்டியிட்(டு) ஏற்பேன் மகிழ்ந்து." (70)

"வேட்டை விரும்புகின்ற வீரன் அவனன்புப்
பாட்டைக் கிணையில்லை பார்த்திடுவாய் – காட்ட
இவனுக்(கு) இணையாக இன்னொரு தொண்டன்
அவனியில் இல்லை அறி." (71)

"ஆருடைச் செய்கை அறிந்திடுவாய் நீநாளை.
நேரிடைக் காண்பாய் நிகழ்வெல்லாம் – கூறியதைத்
தட்டாமல் செய்து தனியே ஒளிந்திரு,
கட்டாய(ம்) ஆற்று கடன்." (72)

"இருக்கு(ம்) இடத்தை எதுகண்டும் நீங்காய்,
கருத்துட(ன்) ஊன்றிக் கவனி – வருத்தமற
யாரிப் பணிசெய்தா(ர்) என்பதைக் கண்டபின்
நேரில் பணிவாய் நினைந்து." (73)

‘‘நாளை நிகழ்வு நடக்கும் சிலவிங்கு,
வேளை அதுதான் விளக்கிட – ஆளை
அடையாளம் காட்டுவேன் அப்போ(து) உனக்கு’’
விடையவன் பெற்றான் விடை. (74)

அத்தனையும் சொன்னான் அவர்தம் கனவினில்
அத்தன் மறைந்தா(ன்) அதன்பின்னர் – சித்தம்
மறக்காமல் வைத்தார்; மறையவர் பின்ன(ர்)
உறக்கம் களைந்தா(ர்) உடன். (75)

காலை விரைந்தார்; கடமைகள் ஆற்றிட,
வேலை முடித்தார் விரைவாக – மூலையில்
தூணின் மறைவில் துரிதம் ஒதுங்கிப்பின்
காணா(து) இருந்தார் கரந்து. (76)

என்றும்போல் திண்ணனும் ஏகினான் அன்புடன்
கொன்று சமைத்ததைக் கொண்டுவந்தான் – அன்றுபல
தீச்சகுன(ம்) எல்லாத் திசையிலும் தோன்றிட
மூச்சிரைக்க ஓடினான் முன். (77)

தடையாய்ச் சகுனங்கள் தான்கண்ட தற்கு
விடையு(ம்) அறிந்தான் விரைவில் – சடையனின்
கண்ணில் குருதி கசிந்திடக் கண்டாங்குத்
திண்ண(ன்) உறைந்தான் திகைத்து. (78)

தன்கையால் கண்ணைத் தடவிக் குருதியை
முன்னம் நிறுத்திட முற்பட்டான் – என்னயிவன்
செய்தாலும் கண்நீங்கிச் செங்குருதி நில்லாமல்
பெய்திடக் கண்டானான் பித்து. (79)

நில்லாது கண்நீங்கி நீளக் குருதிவர
வில்லாள(ன்) ஆற்றாது விம்மினான் – பொல்லாத
அத்துன்பம் தன்னை அளித்தவர் யாரென்று
சித்தத்தில் கொண்டான் சினம். (80)

விலங்கின் செயலிதோ; வேடுவரோ செய்தார்
கலங்கினான் தேடிக் கதறித் – துலங்கிடா
மாய(ம்) இதற்குண்டோ மாற்றம்? புழுங்கினான்
தூய மனத்தன் துடித்து. (81)

உதிரம் மிகவும் ஒழுகுதல் கண்டு
கதறிப் பெருக்கினான் கண்ணீர் – பதறினான்;
செய்வ(து) அறியான்; சிலையா(ய்) அவன்நின்றான்,
உய்வழி காணா(து) உழன்று. (82)

பச்சிலை, வேர்கள் பலவிதமாம் மூலிகை
இச்சையுடன் தேடி இனம்கண்டு – கச்சிதமாய்ச்
சாறெடுத்துக் கண்ணின்மேல் சாற்றினா(ன்) அம்மருந்(து)
ஊறகற்று(ம்) என்றுள்ள(ம்) ஓர்ந்து. (83)

கொடுத்த மருந்தால் குணமேது(ம்) இல்லை;
அடுத்த செயலு(ம்) அறிந்தான் – படித்தபல
பக்குவம் தேர்ந்து பழையதோர் செய்முறையைத்
தக்கதாய்க் கண்டுணர்ந் தான். (84)

தாமெனன்னும் எண்ணம் தலைதூக்கா மாண்புடையான்
ஊனுக்கு வைத்திடுவேன் ஊனென்றான் – கானுறைவான்
கண்டறிந்த அம்முறையால் கண்ணுக்குக் கண்வைத்தான்
பண்டறிந்த பாடப் படி. (85)

கண்ணுக்குத் தந்திடுவேன் கண்ணையே மாற்றெனத்
திண்ண(ன்) உடன்செய்தான் தீர்மானம் – எண்ணத்தைச்
செய்கை எனவாக்கிச் செய்தா(ன்) ஒருதானம்
வைய(ம்) அறியா வழி. (86)

நீக்கினான் தன்கண்ணை நெஞ்சிற் கருணையுட(ன்)
ஆக்கினான் கண்ணாய் அரனுக்குப் – போக்கினான்
துன்பத்தை முற்றும் துரிதவழி தன்னில்;
அன்பிற்கு(ம்) உண்டோ அடைப்பு! (87)

ஓடுங் குருதி ஒடுங்கிப்போய் நின்றுவிடக்
கேடும் அகலக் கிளர்ந்தெழுந்தான் – தேடியே
கண்டேன் மருந்தென்று காணாத பேருவகை
கொண்டான் மனமும் குளிர்ந்து. (88)

ஒருகண் குருதி ஒருநொடியில் நிற்க
மறுகண்ணி(ல்) உற்ற(து)அம் மாயம் – வெரு(வு)இவன்
கொள்ளா(து) எடுத்தான் குறைநொடியில் தீர்மானம்
தள்ளாமை இல்லா தவன். (89)

அச்சமவன் கொள்ளான்; அறிவான் மருந்திதற்குத்;
துச்சமென்(று) எண்ணினான் துன்பத்தை – மிச்சமிங்கு
கண்ணொன்(று) உளது கடவுளுக்(கு) அப்பிடவே
எண்ணத்தில் கொள்ளா(ன்) இடர். (90)

இருக்கு மொருகண்ணை இடந்த பின்மீண்டும்
பொருத்து முறைஎண்ணியது புத்தி – கருத்துட(ன்)
ஓர்காலில் நின்றுமற்(று) ஓர்காலைக் கண்மீது
நேர்காண வைத்தான் நினைந்து. (91)

அடுத்த கண்தோண்டுதற்(கு) அம்பொன்று திண்ணன்
எடுத்துத் தன்கண்ணி(ல்) இடவும் – தடுத்துடனே
நில்லென்று கூறிநிறுத்தினான் நாடகத்தை,
அல்லலைப் போக்கு(ம்) அரன். (௯௨)

எண்ணுதற்கு(ம்) ஒண்ணா இவன்செயல் கண்டபின்
கண்ணுதலான் தாழ்த்தான் கணப்பொழுதும் – நண்ணியவன்
கையைப் பிடித்துடனே "கண்ணப்பா நில்"லென்று
உய்வழி சொன்னா(ன்) உவந்து. (௯௩)

மூன்றுமுறை கூப்பிட்டான் முற்றும் தடுத்திடத்,
தோன்றி உரைத்தான் துடியுடையான் – "ஆன்றமைந்த
காதலால் கண்ணிடந்தாய்; கண்ணப்பன் என்றபெயர்
ஆதலால் தந்தோ(ம்) அறி." (௯௪)

கண்ணை இடந்து கடவுளுக்(கு) அப்பியதால்
கண்ணப்பன் பேரைக் கடவுளிட்டான் – எண்ணமதில்
கானுறைக் கண்ணப்பன் கண்டான் மிகவுயரம்
வானும்கீ(ழ்) ஆகும் வகை. (௯௫)

"கண்ணப்பா" என்று கடவுளே கூப்பிடத்
திண்ண(ன்) எனும்பெயர் தீர்ந்தது – வண்ணமுற
வாயாரக் கூவி வழங்கினா(ன்) அப்பெயரைத்
தாயாரி(ன்) அன்பன் தனக்கு. (௯௬)

தானென்(று) அவன்நினையான்; தந்தான் நயனத்தை
வானோரும் வற்றாது வாழ்த்தினர் – கானத்தன்
அன்பின் பெருமை அரனால் வெளிப்பட
மன்பதை கண்டதவன் மாண்பு. (௯௭)

காடுடைத் திண்ணன்தன் கண்ணிடந்(து) அப்பிடத்
தோடுடைக் காதனுடன் தோன்றினான் – ''பீடுடையாய்!
என்னருகு வந்திரு'' என்றா(ன்) இறைவனும்
தன்னிக(ர்) இல்லானைத் தான். (௯௮)

''வந்துறைவா(ய்) என்றன் வலப்பக்கம்'' என்றிடமும்
தந்தழைத்தான் கங்கைத் தலையுடையான் – இந்தவிதம்
முக்கண்ணன் கூப்பிட மூண்ட நல்லன்போடு
பக்க(ம்) அணைந்தான் பணிந்து. (௯௯)

சோதனையில் திண்ணன் சொடுக்கொன்றில் வென்றிட
வேதனையில் கோசரியார் வெம்பினார் – ''காதலின்றிப்
பேணுகின்ற ஆசாரம் பொய்யில்லா அன்பின்முன்
நாணுறும் காட்டினாய் நன்று.'' (100)

மண்ணுலக(ம்) இச்செயலின் மாண்பினைக் கண்டதனை
விண்ணின் பெரிதாம் வியந்தது – கண்ணப்ப(ன்)
ஒப்பதோர் அன்புடையா(ர்) ஓராளு(ம்) இல்லையெனச்
செப்பு(ம்) அவனுடைய சீர். (101)

அன்பிற்(கு) அடையாளம் ஆரென்று காட்டுதற்கு
மன்பதை கண்டதிலை மற்றோராள் – இன்பமுறக்
கண்ணப்பன் அன்பில் கடுகேனும் காட்டினால்
வண்ணமுறும் நம்முடைய வாழ்வு. (102)

மாளாத அன்பு மனங்கொண்டு நாதன்பால்
நாளாறி(ல்) ஈந்தான் நயனத்தை – ஆளாகி
நின்றஅவன் தொண்டிற்கு நேரென்று காட்டிட
ஒன்றுமே இல்லை உணர். (103)

இச்சை இவனொப்ப ஈசன்பால் கொண்டவரும்
இச்சகத்தி(ல்) உண்டோ இயம்பிடுவீர் – மெச்சியிவன்
காதை புவிதனில் கற்றிடத் தக்கநல்
வேதம் எனநீ விளம்பு. (104)

நூற்பயன் :

*இடியா(ய்) இறங்கும் இடர்கள் ஒழித்து*
*விடியலைக் கூட்டும் விரைவில் – அடியாரின்*
*சீலமிகு காதை சிறப்பெலாம் கற்போர்க்குக்*
*காலமெலாம் தந்திடும் காண்.* (1)

*போக்கும் வினைகள்; புரிகின்ற செய்கைகளில்*
*ஆக்கம் அளிக்கும் அளப்பின்றி – வாக்கிதுவே,*
*காதை பிடிப்போர்க்குக் காலன் அணுகாத*
*பாதை திறந்திருக்கும் பார்.* (2)

கண்ணப்ப நாயனார் புராணம் முற்றும்

# திருநீலகண்ட நாயனார் புராணம்

*(சிங்கப்பூரில் 24-07-2011 ஞாயிறு காலை, 31ஆவது திருமுறை மாநாட்டில் அறுபத்து மூவர் குருபூசை விழாவின் ஓர் அங்கமாகத் திருமுறைக் கவியரங்கத்தில் படித்தது.)*

## விநாயகர் துதி

தும்பிக்கை நாதா துணையிருப்பாய் நீயென்று
நம்பிக்கை வைத்து நயக்கின்றேன் – தம்பிக்குக்
காதலில் அன்றருள் காட்டியது போலென்றன்
ஓதலிலும் செய்வா யுவந்து.

## கலைமகள் துதி

தாயே கலைவாணி தண்ட முனக்கிட்டு
நீயே சரணென்று நிற்கின்றேன் – நாயேனை
நற்றமிழ் வெண்பா நவிலும் திறம்முழுதும்
கற்றறியச் செய்வாய் கனிந்து.

## காப்பு

தட்டாத் தளையும் தரமான சொல்லழகும்
எட்டாக் கனியென் றிருக்காமல் – கட்டாயம்
எண்ணும் பொழுதிலிவை என்வச மாயிடக்
கண்ணுதற் கொண்டவனே காப்பு.

## வெண்பாக்கள் (98)

பெற்றவர் யாரோ? பெயருமவர் வைத்தாரோ ?
நற்றமிழ் நூல்களில் நான்காணேன் – கற்றறிந்த
ஊரார் சிலர்கூடி ஓர்பேர் அவர்க்கிட்டுப்,
பேரா தரவளித்தார் பின். (1)

என்னபேர் சூட்டுவ(து) என்னும் பிரச்சினை
அன்னவர் காணார் அணுவளவும் – இன்னமுதாய்த்
தித்திக்கும் பேரொன்றைத் தேர்ந்தே அவர்க்கிட்டார்;
எத்திக்கும் இல்லையதற் கீடு. (2)

திருநீல கண்டனெனத் தெய்வத்தின் பேரை
ஒருநாளும் நீங்கா(து) உரைத்தார் – வருநாளில்
தப்பா(து) அதனைத் தரணியோர் சூட்டிட
அப்பேர் அமைந்த(து) அவர்க்கு. (3)

தில்லையான் பேரன்றித் திண்ணமாய் வேறுரைப்ப
தில்லை யெனவாழ்ந்தார் தில்லையில் – தில்லையுறை
மக்கள் மகிழ்ந்து மனமொப்பி அந்நெறியை
ஒக்கப் புகழ்ந்தார் உவந்து. (4)

சித்தம் முழுதும் சிவன்நாமம் ஒன்றையே
நித்தம் நிறைப்பார் நினைந்திவர்– அத்தனை
உள்ளமாம் கோவிலில் உட்கார வைப்பதில்
கள்ளமிவர் செய்திடார் காண். (5)

ஆடுவார் நாளும், அரன்புகழ் சொல்லியிவர்;
பாடுவார் என்றும் பரமனையே – கூடுவார்
கூத்தனின் கோவிலைக் கும்பிட்(டு) அவன்நாமம்
நாத்தழும் பேற நவின்று. (6)

தில்லையுறைக் கூத்தன் திருநீல கண்டருக்(கு)
இல்லையென வைத்தான் இடர்தன்னை – சொல்லை
இனிதாகக் கூறி இறையன்பு மிக்க
மனிதராய் வாழ்ந்தார் மகிழ்ந்து. (7)

ஏற்றார் குயத்தொழிலை ஈசன் பணியென்றே,
நோற்றார் அதுதன்னை நோன்பெனவே – மாற்றாத்
திறம்கொண்டு செய்தொழிலில் தீமை அகற்ற
அறம்துணைக் கொண்டார் அவர். (8)

செய்வார் தொழிலைச் சிறப்புறத் தம்பேச்சில்
பெய்வார் கனிவு பிழையின்றி – உய்வார்
குயத்தொழில் தன்னில் குவலயம் காணா
வியத்தகு ஆற்றல் விழைந்து. (9)

மண்ணாற் கலன்பலவும் மக்கட்குச் செய்தளிப்பார்;
எண்ணார் பிறருக்(கு) இடரிவரும் – அண்ணா
மலையானின் பாதம் மறவாது போற்றி
உலையா(து) இருந்தார் உளம். (10)

பண்ணுவார் மண்கொண்டு பானையுடன் சட்டிவகை;
எண்ணுவார் என்றும் இறையடியே – நண்ணுவார்
நாதனின் பாதத்தை நாளும் தவறாமல்
போதொடு பூசை புரிந்து. (11)

பாத்திரம் பாரோர்க்குப் பல்வகையாப் பண்ணுகின்ற
சாத்திரம் கற்றார் சளைக்காமல் – நேத்திரம்
நெற்றியில் கொண்டானை நித்தம் தொழுததனால்,
வெற்றியே கண்டார் விரைந்து. (12)

ஓடளித்து வாழ்ந்துவரும் ஒப்பில்லாத் தொண்டருக்(கு)
ஆடற் கடவுள் அருள்செய்தான் – பீடுமிகு
மங்கை இணைந்தாள் மனைவியென இல்வாழ்வில்,
பொங்கியது இன்பப் புனல். (13)

கற்புக்(கு) இலக்கணம் காதல் மனையாளும்
அற்பம் அவள்முன் அருந்ததியும் – பொற்புநிறை
நங்கையால் இல்லத்தில் நாளும் அவர்கண்டார்
கங்கையாய் ஓடும் களிப்பு. (14)

சொல்லில் இனிமை சூழ உரைத்தென்றும்
அல்லல் களையும் அடியவராய் – எல்லையறு
சீலமிவர் கொண்டாலும் சிற்றின்ப வேட்கையது
ஆலமாய் நின்ற(து) அகம். (15)

எல்லா நலனும் இருந்தாலும் உள்ளத்தில்
பொல்லா விருப்பம் புகுந்திடவே – இல்லாள்
இருந்தும் பரத்தையிடம் இன்புற்றார் ஓர்நாள்
விருந்தென்(று) அதனை விழைந்து. (16)

இன்பத் துறையில் எளியர் அவரானார்
துன்பத்தில் இல்லாள் துவண்டிடக் – கண்பொத்திச்
சும்மா இராமல் சொன்னாள் முடிவொன்றை
அம்மா துடனாங்(கு) அவர்க்கு. (17)

உத்தமியாம் இல்லாளும் ஓர்ந்தாள் அவர்செயலை,
அத்தவறை ஒப்பாள் அணுவளவும் – சித்தமதில்
கொண்டாள் முடிவொன்று கோபம் தவிர்த்தவளாய்
விண்டாங்(கு) உரைத்தாள் விரைந்து. (18)

''எந்தவொரு இன்பம் இசைந்தீரோ வேசியிடம்
அந்தவொரு இன்பம் அளியேன்நான் – இந்தவொரு
வாக்குத் தவறேன் வழுவா(து) இதில்நிற்பேன்;
நீக்குவேன் கூடல் நினைந்து.'' (19)

''உடலின்ப ஆசையினால் ஒவ்வாதன செய்தீர்;
உடலுறவு இல்லையினி உம்பால் – கடனறிந்து
இல்லதனில் செய்வேன் இனிய பிறவெல்லாம்
நல்லமனை யாளன்றே நான்.'' (20)

''அக்கரையில் நீர்நில்லும்; அன்புள்ள இல்லாளாய்
இக்கரையில் யானும் இருந்திடுவேன் – சக்கரையாய்
எக்குறையும் இல்லாமல் இல்வாழ்விற் குற்றதெலாம்,
அக்கறையாய்ச் செய்வே னறிந்து.'' (21)

தன்னிச்சை கூட்டிய தப்புணர்ந்த தொண்டருடன்
மன்னிப்பும் கேட்டார் மனமுருகி – பன்னினாள்
''நீங்கிடேன் இல்லம் நிலைத்து மனையாளாப்
பாங்கினில் செய்வேன் பணி.'' (22)

மானம் அடைந்தது மாற்ற முடியாத
ஊனம் எனவுணர்ந்தாள் உத்தமியும் – வானம்
வரையெட்டும் மாண்பால் வனிதையின் சீற்றம்
கரைதனில் நின்றது காண். (23)

அத்தனை வேலையையும் ஆர்வமுடன் அம்மனையில்
நித்தமவள் செய்தாள் நியமத்தில் – பத்தினியாய்
கொண்டவன் சேவை குறையின்றி ஆற்றினும்
அண்ட விடார்தம் அருகு. (24)

கொண்டவன் செய்கையால் கோபித்து நீங்காமல்
பண்டெனவே செய்தாள் பணிபலவும் – உண்டுறங்கும்
இல்லில் கடமை இனிதே நிறைவேற்றி
வல்லியவள் காட்டினாள் வாழ்ந்து. (25)

நாட்கள் பலவும் நகர்ந்தன இவ்வாறு
வேட்கையைத் தொண்டர் விலக்கிடினும் – ஆட்கொல்லி
ஆசையும் சற்றே அலைக்கழிக்க ஓர்நாளில்
வீசினார் வெட்கம் விரைந்து. (26)

இல்லாள் சினம்தணிக்க எண்ணியிவர் அப்போது,
மெல்லத் தொடமுயன்றார் மேனியை – ஒல்லை
ஒதுங்கினாள் உத்தமியும் ஒப்பாளச் செய்கை
பதுங்கினாள் ஓர்மூலை பார்த்து. (27)

ஆசையது வெட்கம் அறியா(து) எனும்கூற்றைக்
காசினியோர் உண்மையெனக் கண்டபடி – கூசாமல்
இல்லாள் அருகில் இவர்மேலும் ஏகிடவே
சொல்லாய் எழுந்ததச் சூள். (28)

வாளாய் இராமல் வனிதை எழுந்தாங்குச்
சூளாய் உடனுரைத்தாள் சுள்ளென்று – மாளாத்
துயரத்தில் உள்ளம் துவண்டாலும் வார்த்தையில்
வயிரத்தின் கூர்மை வடித்து. (29)

''தீண்டாதீர் எம்மை''த் தெரிவித்தாள் இல்லாளும்;
''தாண்டாதீர் கோட்டைத் தவறியும் – ஆண்டான்
திருநீல கண்டத்துத் தெய்வத்தின் ஆணை;
ஒருநாளும் சேரேன் உடல்.'' (30)

''சொக்கனின் மீதாணை; சொன்னேன் செவிக்கொள்வீர்
பக்கமும் வாராதீர் பற்றுடனே – எக்கணமும்
சூளென்(று) எழுந்தயிச் சொல்லில் வழுவாமல்
நாளெல்லாம் நின்றிடுவேன் நான்.'' (31)

புனலென வேகம் புகுந்தன சொற்கள்
கனலெனக் காதினைக் காய்ச்சி – அனலின்
புழுவாய்த் துடித்தார்; புகன்றதைத் தக்க
கழுவாய் எனஅவரும் கண்டு. (32)

மனையாள் உரைக்கு மறுமொழியும் சொன்னார்;
வினையால் நிகழ்ந்ததற்கு வெட்கி – ''அணையேன்நான்
பெண்டிரை ஓர்நாளும், போற்றுவேன் என்றென்றும்
தண்டனை என்றித் தவம்.'' (33)

''எம்மையெனச் சொன்னீர்; இதனால் இனித்தீண்டேன்
உம்மையும் உள்ளடக்கி ஓர்பெண்ணை – செம்மையே
என்றென்றும் போற்றி இதில்நான் வழுவாமல்
குன்றென்று நிற்பேன் குணத்து.'' (34)

''உள்ளமும் தீண்டா(து) ஒருபெண்ணை வாழ்விலினிக்
கள்ளமிதில் செய்யேன் கடுகளவும் – பள்ளமதில்
ஓர்முறை வீழ்ந்தேன்; உணர்ந்தேன் பிழையினி,
நேர்வழியே நிற்பேன் நிலைத்து.'' (35)

சட்டென்று சூளவள் சாற்றிடக் காமத்தைப்
பட்டென்(று) அவித்தார் பதறாமல் – கட்டறுத்(து)
ஓடும் மனத்தை ஒருநிலையில் வைத்தல்கை
கூடும் எனுமுறுதி கொண்டு. (36)

குவித்தார் மனத்தினைக் கூத்தன் கழலில்;
அவித்தார் உடலின்ப ஆசை – செவித்தேனம்
பிஞ்ஞகன் நாமம் பிழையா(து) உரைப்பதில்
கொஞ்சமும் வையார் குறை. (37)

மாதவள் தன்னை மனைவி எனநோக்கார்;
ஏதிலார் என்றுதான் எண்ணுவார் – நாதனின்
பேரால் நவின்ற பெருஞ்சூள் தருஞ்சூடு
ஆறாது வைத்தார் அகம். (38)

சொல்லை மனம்வைத்தார் சொன்ன கணம்முதலாய்
எல்லை தனைமீறார் இம்மியும் – தொல்லையறப்
பூண்ட கடுஞ்சூளைப் போற்றி அதைச்சற்றும்
தாண்டா(து) அவரிருந் தார். (39)

தொட்டுக்கொள் ளாமல் தொடர்ந்தார் சபதத்தை;
விட்டுப் பிரியாத வீம்புடனே – கட்டுக்குள்
ஆசையை வைக்க அரன்தாளில் செய்கின்ற
பூசையில் கண்டார் புகல். (40)

அண்டை அயலார் அறியார் அவரிடைச்
சண்டை இருப்பதைச் சற்றுமே – தொண்டரும்
இல்லறம் தன்னை இயல்பினில் ஆற்றினார்
சொல்லறம் என்றேற்றார் சூள். (41)

காமம் களைந்தார் கணமொன்றில்; கயிலாயன்
நாமம் தனையே நவில்பவராய் – ஏமம்
இறைவன் கழலே எனுமுறுதி கொண்டு
நிறைவோ(டு) அதில்வீழ்ந்தார் நீண்டு. (42)

கட்டிளம் பெண்ணவள்; காளையிவர் என்றாலும்;
சுட்டெரித்தார் காமச் சுகந்தன்னை – தொட்டிடேன்
ஏற்றதம் சூளில் இமயம் எனநின்றார்
மாற்றம் அறியா மனத்து. (43)

எழில்சொட்டும் இல்லாள் இருந்தாள் அழகுப்
பொழிலென்(று) அவனியே போற்றத் – தழலென்று
மூளும் உடல்வேட்கை முற்றாகப் பக்தியினால்
மாளும் எனக்கொண்டார் மாண்பு. (44)

எடுத்த சபதத்தில் இம்மியும் குன்றார்;
தடுத்தார் அணையிட்டுத் தாகம் – அடுத்துள்ள
வீட்டார் அறியாமல் வில்லங்கம் தன்னையவர்
காட்டாது வைத்தார் கரந்து. (45)

அல்லலைக் கூட்டும்; அழித்திடும் ஆக்கத்தை,
வெல்ல முயல்வதும் வீணென்பார் – தொல்லைதரு
காமத்தின் ஆளுமையைக் கற்றோர் அறிந்தாங்கு
நேமத்தில் நிற்பார் நினைந்து. (46)

முற்றும் துறந்த முனிவர்க்கும் ஆகாது
சிற்றின்ப ஆசைச் சிறைமீளல் – கற்றறிந்த
நூலோரின் கூற்றை நொடியில் தகர்த்தவராய்
ஏலுமது என்றார் இசைந்து. (47)

ஆண்டுகள் சென்றன; அவ்விருவர் ஆக்கையால்
தீண்டுதல் செய்யார் தினையளவும் – பூண்டதம்
சூள்தன்னில் நின்றார் சுருதி குறையாமல்
கோள்சற்றும் இல்லாக் குணத்து. (48)

கொண்ட விரதத்தைக் குன்றாமல் போற்றியதால்
கண்டிடார் இன்பம் கடுகளவும் – அண்டியது
மூப்பும் அவரை முழுமூச்சாய்ச் சூள்தன்னைக்
காப்பதில் காலம் கழிந்து. (49)

அவர்தம் சிறப்பை அவனியில் மற்றோர்
எவரும் அறியா(து) இருந்தார் – சிவனதனால்,
மன்னுலகுக்(கு) அன்னாரின் மாட்சிமை காட்டிடத்
தன்னுரு மாற்றிவந் தான். (50)

விடையேறும் பெம்மானோர் வேடம் புனைந்தான்;
சடைமுடிக் கோலத்தைச் சாத்தி – உடையென்றே,
கோவணம் கட்டிக் குறுகினான் அவ்வில்லம்
ஆவலுடன் செய்தான் அது. (51)

கேடு களையக் கிளர்ந்தெழுந்(து) எம்பிரான்,
ஓடு கரம்தரித்(து) ஓடினான் – நாடுபுகழ்
தில்லை நகரடைந்தான் தீர்மானம் ஒன்றுடனே,
ஒல்லை அதுமுடித்தல் ஓர்ந்து. (52)

சிவயோகி வேடம் சிறப்புறத் தாங்கி,
அவரில்லம் சேர்ந்தான் அரனும் – தவநெறித்
தொண்டர்தம் வாசலில் தோன்றிய யோகியைக்
கண்டதும் வீழ்ந்தார் கழல். (53)

வீட்டினுள் வாரும் விருந்துண்ண என்றழைத்துக்
காட்டினார் நேசம் கனிவுடன் – வாட்டமற
உண்ணக் கொடுத்தார்; உபசரித்தார் அன்பெல்லாம்
வண்ணமுறச் சொல்லில் வடித்து. (54)

நண்ணிய யோகியை நாதனிடம் அன்புநிறைப்
புண்ணியர் என்று புரிந்தவராய்ப் – பண்ணினார்
சேவை பலவும் சிறப்புற யோகியின்
தேவை அனைத்தும் தெரிந்து. (55)

பின்னும் பகர்ந்தார் ''பெரியவரே! சேவைகள்
இன்னும் உளவோ எனக்கிங்கு? – சொன்னதுமே
ஆற்றிடுவேன் அப்பணி ஐயா உமதாணை
ஏற்றிடுவேன் சென்னி இசைந்து.'' (56)

திருநீல கண்டரது திண்ணமொடு கூற
ஒருநொடியில் யோகி உரைத்தார் – ''தருகின்றேன்
இப்போதே உம்மிடம் ஈடில்லா இவ்வோட்டை,
எப்போதும் காப்பீர் இது.'' (57)

ஓட்டின் பெருமை உரைத்தார் அதன்பின்னர்
நீட்டினார் தொண்டரிடம் நீள்சடையார் – நாட்டில்
இதனை நிகர்த்ததாய் இல்லை பிறிதென்(று)
அதனைக் கொடுத்தார் அவர். (58)

''நீண்டநாள் போனாலும் நிச்சயம் வந்திடுவேன்''
ஆண்டவன் சொன்னான் அவரிடம் – ''வேண்டியே
பீடுமிகும் ஓட்டைப் பெறவே உமதில்லம்
நாடுவேன் ஓர்நாள் நயந்து.'' (59)

''அப்போது கேட்கையில் ஐயா உடனெனக்குத்
தப்பாது நீரிதைத் தந்திடுவீர் – ஒப்பிதற்கு
இல்லை எனமீண்டும் எச்சரித்தேன் இந்தவொரு
சொல்லை மனம்வைப்பீர் சூழ்ந்து.'' (60)

பெற்ற உடனே பிழையின்றி ஓரிடத்தில்
முற்ற ஒளித்தார் முறைதன்னில் – மற்றொருவர்
காணாமல் ஓடுதனைக் காக்கும் பணியென்றும்
கோணாமல் செய்தார் குளிர்ந்து. (61)

எங்கந்த ஓட்டை இவரொளித்து வைத்தாரோ
அங்கிருந்(து) ஓர்நாள் அகற்றினான் – பங்கமிலாத்
தன்னடியார் மாண்பைத் தரணிக்குக் காட்டிடவே
அன்னவிதம் செய்தா னரன். (62)

காட்டுப் பொடிபூசிக் காலமெலாம் ஆடுபவன்
ஓட்டை அகற்றியதும் ஓடினான் – தீட்டியதன்
திட்டம் முடிக்கத் திகைந்தது வேளையென
எட்டினான் இல்லம் இசைந்து. (63)

''எங்கேயென் ஓடு? எடுத்துவர நீஓடு
இங்கே எனக்கதுதா இக்கணமே'' – அங்குற்றுத்
தொண்டரை யோகி துரத்திடப் பாவமவர்,
அண்டினார் தன்வீட் டகம். (64)

ஓடினார் முன்னம் ஒளித்த இடம்தன்னில்
தேடினார்; காணார்; திடுக்கிட்டார் வாடினார்;
சல்லடையாய் வீட்டைச் சலித்தாலும் காணாமல்
எல்லையின்றிக் கண்டார் இடர். (65)

இல்லையெனக் கண்டார்; இனியும் அதுதேடேன்;
ஒல்லை முடிவதனை ஓர்ந்தபின் – சொல்லிடவே,
வாசல் அடைந்து வணங்கினார் யோகியை;
கூசியே நின்றார் குனிந்து. (66)

எங்கும் அதுவில்லை என்றுணர்ந்த தொண்டரும்
பங்கம் அடைந்து பதறினார் – தொங்கும்
தலையராய் வந்து தவயோகி தாளில்
உலைவுற்று வீழ்ந்தார் உடன். (67)

''அவல மடைந்தேன்;'' அரற்றியே தொண்டர்
கவலையுடன் வீழ்ந்தார் கழலில் – சிவயோகி,
''ஏதுன் அவலம்? இயம்புவாய்'' என்றிடக்,
கோதறச் சொன்னார் குமைந்து. (68)

''மாயமாய் ஓடு மறைந்த வழியறியேன்;
தீயவன் அல்லேன் திருடனில்லை; – தூயவரே
மன்னிப்பீர் என்பிழையை; மாற்றோடு செய்தளிப்பேன்
பன்னினார் தாளில் பணிந்து. (69)

''மாற்றொரு ஓடு மறுகணத்தில் செய்தளிப்பேன்''
கூற்றைச் சிவயோகி கொள்ளாது – சாற்றினார்
''பொன்னோடே தந்தாலும் போகேன் அதுவாங்கி
என்னோடே வேண்டும் எனக்கு.'' (70)

''கேடு விளைவித்தீர் கீழ்த்தரச் செய்கையினால்;
ஓடு திருடி ஒளித்திட்டீர்'' – சூடுமிகும்
சொல்லால் இவர்மனத்தைச் சுட்டெரித்தான் அன்றொருநாள்
கல்லால் அடியுற்றான் காண். (71)

வேறுவழி ஏதும் விளங்காத தொண்டருமே,
''கூறும் இனிச்செய்கை'' கும்பிட்டார் – ஆறுதலை
உன்னிப் பணிகின்ற உத்தமர்க்(கு) ஓர்தீர்வு
பன்னினார் யோகி பரிந்து. (72)

''ஓட்டைத் திருடவில்லை உண்மையது தானென்று
நீட்டி முழக்குகின்றீர் நீரிங்கு – காட்டும்
வழியிதனை ஏற்று வழுவாது செய்தால்,
பழியதுவும் போகும் பறந்து.'' (73)

''பொய்யுரை அன்று புகல்வ(து) எனக்கொள்ளப்
பையனுடன் சொல்வீர் பகர்ந்ததை – மெய்யென்று
சத்தியம் செய்திடுவீர் சந்ததியாம் உம்முடைய
புத்திரன் கையைப் பொதிந்து.'' (74)

''கையைப் பிடித்துக் கயத்தில் இறங்குவீர்;
பையனை நீங்காமல் பற்றியே'' – ஐயமும்
போயகலப் பாதை புகன்றான் நிகழ்த்திய
மாயம் அனைத்தும் மறைத்து (75)

''புதல்வன் எனக்கில்லை; பொய்யுரை அன்று;
முதல்வன்மேல் ஆணை'' மொழிந்தார் – நுதல்நயனம்
கொண்டவன் கூறினான் ''கூப்பிடும் இல்லாளாய்க்
கொண்டவளைச் செய்கை குறித்து.'' (76)

''அளப்பரு வண்ணம் அமைந்தாளைப் பற்றிக்
குளப்படி ஏகிக் குளிப்பீர் – உளப்படி
உண்மை பகர்வீர்'' உரைத்தான் வழிதன்னை
வெண்மை விடையான் விரைந்து. (77)

''இல்லாள் கரம்கோர்த்(து) இதுசெய்ய நானொப்பேன்;
ஒல்லாது நீவிர் உரைத்ததும் – எல்லாமே
சத்தியம் என்பதனைச் சாற்றுவேன் நான்மட்டும்
உத்தரவு தாரும் உடன்.'' (78)

தொண்டர் மறுத்துரைக்கத் தூயமறை யோகியும்,
கொண்டசினம் கொப்புளிக்கக் கூறினார் – ''அண்டுவோம்
தில்லைவாழ் அந்தணரை தீர்ப்பென்(று) அவர்கூறும்
சொல்லைநாம் ஏற்றிடுவோம் சூழ்ந்து.'' (79)

தீதேதும் செய்யாதார்; தில்லைவாழ் அந்தணர்;
கோதேதும் இல்லாக் குணத்தவராம் – ஆதலினால்
ஆங்கவரை நாடி அவரிடம் வேண்டினார்
''தீங்ககலத் தாருமொரு தீர்ப்பு.'' (80)

அந்தணர் முன்னால் அவரவர் வாதத்தைத்
தந்தனர் சற்றும் தயங்காமல் – அந்தவிதம்
ஓதியவை உன்னி உரைத்தார் ஒருதீர்ப்பு,
நீதியின் பக்கமவர் நின்று. (81)

''உளம்தன்னில் உண்மை உடையவரே ஆயின்,
குளம்தன்னில் மூழ்கியதைக் கூறும் – வளம்தன்னில்
மிக்கமனை யாளவளின் மென்மைக் கரம்பற்றி
இக்கணமே செய்வீர் இது.'' (82)

சொல்லிய அத்தீர்ப்பைச் சொன்னார் மனைவியிடம்,
வல்லியும் ஒப்பு வழங்கினாள் – இல்லில்
இருவருமாய்ப் பேசி இதுசெய்யும் திட்டம்
உருவாக்கி மீண்டார் உடன். (83)

மூங்கில் கழியை முனையில் இருவரும்
தாங்கி இறங்கினார் தண்ணீரில் – ஆங்கது
கண்டதும் யோகி கரைநின்று கூவினார்
கொண்டதொரு கோபம் குவித்து. (84)

"பழியொன்று கொண்டீர் பரிந்தது போக்க
வழியொன்று சொன்னார் வகுத்து – கழியொன்றும்
இல்லாமல் செய்வீர் இயம்பிய வண்ணமே,
இல்லாளின் கைகோர்த்(து) இது." (85)

தப்புவழி சென்றதனால் தண்டனை பெற்றவரும்
தப்பவழி இன்றித் தலைகுனிந்தார் – செப்பினார்
இல்லாளைத் தீண்டுதல் ஏனில்லை என்பதை
நல்லோர் செவியுறவே நன்று. (86)

"மனையாளைத் தீண்ட மறுப்பதுவும் என்றன்
வினையாலே கண்ட விளைவு." – புனையாமல்
பண்டை நிகழ்வெல்லாம் பாரோர் செவிக்கொள்ள
விண்டங்கு வைத்தார் விரைந்து . (87)

இல்லில் இருவருமாய் ஏற்ற சபதத்தைச்
சொல்லி விளக்கினார் சோகமற – வல்லியவள்
சொன்ன ஒருசொல்லால் சூழ்ந்தவச் சூள்பற்றி
அன்னவர் கேட்டிடவே ஆங்கு. (88)

தீண்டல்ஏன் இல்லை தெரிவித்தார் காரணத்தைப்
பூண்டசூள் கூறினார் பொய்யின்றி – ஆண்டாண்டாய்ப்
போற்றிவரும் பெற்றி புகன்றார் புவியறியச்
சாற்றினார் உண்மையைச் சார்ந்து. (௮௯)

தடியுற்ற கையராய்த் தண்ணீரில் மூழ்க
முடிவுற்ற(து) அவ்விருவர் மூப்பும் – துடியுடையான்
சீரிளமை தந்தான் சிறந்தஅத் தம்பதிக்குப்
பாரிலொரு விந்தை படைத்து. (௯0)

கோலைப் பிடித்துக் குளத்தில் குளித்தார்க்கு
வாலைப் பருவம் வழங்கினான். – காலைக்
கதிரவனை விஞ்சும் கனகத் திருமேனி
குதிரவே வைத்தான் குளிர்ந்து. (௯௧)

போயிற்று மூப்பு புகுந்தது புத்திளமை
ஆயிற்றுப் பொன்போல் அவர்மேனி – வாயுற்று
மெய்யன்றி வேறு மொழிந்திடா அன்பருக்(கு)
ஐயனுடன் செய்தான் அருள். (௯௨)

குளம்தன்னில் மூழ்கிக் குளித்தெழுந் தாருக்(கு)
இளந்தம் பதித்தோற்றம் ஈந்தான்– களம்தன்னை
நீங்கியே பெம்மானும் நின்றான் உமையொடும்
ஓங்கியே வானில் ஒளிர்ந்து. (௯௩)

தொண்டர் சிறப்பைத் தொல்லுலகு வாழ்கின்றோர்
கண்டறிய வைத்தான் கயிலாயன் – வண்டுறையும்
மாலையொடு காட்சி மறைக்காமல் எல்லோர்க்கும்
சீலமுறத் தந்தான் சிவன். (௯௪)

செம்மையே போற்றிச் சிவன்நாமம் சொல்லியதால்
இம்மையே சேர்ந்தார் இறையடியை – அம்மையுடன்
அப்பன் அளித்தான் அவனியோர் கண்காண
ஒப்பில்லாப் பேறொன் றுவந்து. (௯5)

''வென்றீர் புலன்களை வேட்கை அகற்றினீர் ,
கொன்றீர் உடற்பசியைக் கோதின்றி – நன்றின்றே
நாடுவீர் இங்கு; நயந்தேன் சிவலோகம்;
கூடுவீர் எம்மைக் குளிர்ந்து.'' (௯6)

முக்கண்ணன் கூப்பிட மூண்டெழுந்த பக்தியுடன்
அக்கணமே சென்றார் அவனருகில் – எக்கணமும்
அப்பனுக்குப் பூசைகள் அங்கிருந்த வண்ணமே,
ஒப்பின்றிச் செய்தார் உவந்து. (௯7).

நின்றார் கடுஞ்சூளில் நித்தம் வழுவாமல்;
சென்றார் அதனால் சிவலோகம் – ஒன்றியே
நாதன் அருகுற்ற நல்லவரின் காதையிதை
ஓதியே கண்டேன் உவப்பு. (௯8)

நூற்பயன்:

*நலம்பல கூட்டும்; நலிவினைப் போக்கும்;*
*மலம்பல வற்றையும் மாய்க்கும் – பலம்தரும்;*
*தொண்டரின் காதை தொடர்ந்து படிப்பதால்*
*உண்டுனக்(கு) என்றும் உயர்வு.*

திருநீலகண்ட நாயனார் புராணம் முற்றும்.

ஒப்பிலா ஒருமூவர் முற்றும்

# சிங்கப்பூர் திருமுறை மாநாடு ஏற்பாட்டுக் குழு

திருமுறைகள் ஒலிக்கட்டும், திருவருள் பெருகட்டும் என்பதைத் தங்கள் முழக்க வாசகமாகக் கொண்ட அமைப்பு, சிங்கப்பூர் திருமுறை மாநாடு ஏற்பாட்டுக் குழு. முற்றிலும் தன்னார்வத் தொண்டர்களால் மட்டுமே இயங்குவது இது. எந்த ஒரு தனிப்பட்ட புரவலர் ஆதரவை மட்டும் நம்பி இயங்காமல், அனைத்துத் தரப்பினரின் ஆர்வத்தையும், பங்களிப்பையும் அடித்தளமாகக் கொண்டு, கடந்த 32 ஆண்டுகளாக இடைவிடாமல் ஆண்டுதோறும் திருமுறை மாநாட்டைச் சிறப்பாக நடத்தி வருகிறார்கள் இவர்கள்.

திருமுறைகளைப் போற்றி, சைவத்தின் பெருமை பரப்பிவரும் குழு இது. ஒவ்வோர் ஆண்டும் ஜூலை மாதம் இறுதி வாரத்தில் வெள்ளி, சனி, ஞாயிறு ஆகிய மூன்று நாட்களில் திருமுறை மாநாடு நடத்தி வருகின்றனர்.

தமிழிலும் சைவத்திலும் ஆழங்கால்பட்ட, நல்ல பேச்சாளர்களை உலகின் பல பகுதிகளிலிருந்தும் அழைத்துவந்து மாநாட்டில் சிறப்புச் சொற்பொழிவுகளை வழங்கச் செய்துவருகின்ற அமைப்பு இது. ஞாயிறு காலை நடக்கும் அறுபத்து மூவர் குருபூசை விழாவின் ஓர் அங்கமாக நடைபெறும் கேள்வி பதில் அரங்கு மிகப் பயனுள்ள, அதே நேரத்தில் சுவாரஸ்யமான நிகழ்வாகவும் அமைகிறது.

திருமுறைகள் வருங்காலச் சந்ததியினரைச் சென்றடைய வேண்டும் என்ற நோக்கத்தில் ஆண்டுதோறும், மாநாட்டை ஒட்டிப் பல்வேறு போட்டிகளை நடத்தி மாணவர்களை அவற்றில் பங்கேற்க வைத்து, ஊக்கமளித்து உற்சாகப்படுத்தி வருகின்ற அமைப்பும் இது. வெற்றி பெற்ற மாணாக்கர்களை மாநாட்டு விழாவில் மேடையேற்றி, அவர்கள் தத்தம் திறமைகளை வெளிக்காட்டவும் வாய்ப்பு அளிக்கின்றார்கள்.

மாநாட்டை ஒட்டி, திருமுறைகளின், சைவசமயத்தின், நாயன் மாரின் பெருமைகளைக் கூறும் நூல்களையும், ஒலிவட்டுக்களையும் வெளியிட்டு அவற்றின் மூலமும் சைவத் திருமுறைகளின் சிறப்பைப் பரப்பி வருகின்றார்கள் இவர்கள்.

அவ்விதம், 2012ஆம் ஆண்டு வெளியிடப்பட்ட ஒரு நூல்தான் இதுவரை நீங்கள் படித்த இந்த *ஒப்பிலா ஒருமூவர்.*



" பன்னிரு திருமுறைகளின் பெருமைகளைக் கூறி, அதன் மூலம் அவற்றை மக்களிடம் எடுத்துச் செல்லும் நோக்கத்தில் ஆண்டுதோறும் ஜூலை மாதம் இறுதி வாரத்தில் சிங்கப்பூரில் " திருமுறை மாநாடு" நடைபெற்று வருகிறது. 2012ஆம் ஆண்டு மாநாடு அவ்வரிசையில் 32ஆவதாகும். ஒவ்வொரு ஆண்டும் ஜூலை மாதக் கடைசி வாரத்து வெள்ளி, சனி, ஞாயிறு ஆகிய மூன்று நாள்களில் சிங்கப்பூர் ஆலயம் ஒன்றில் மாநாடு நடைபெறும். வெள்ளி, சனி இரு நாட்களில் மாலையிலும், ஞாயிற்றுக் கிழமை காலை மாலை இருவேளைகளிலும் என்று மொத்தம் நான்கு அமர்வுகளாக விழா நடைபெறும். ஞாயிற்றுக்கிழமை காலை நிகழ்வு அறுபத்து மூவர் குரு பூசை விழாவாக அமையும்.

மாநாட்டில் சைவ சமயம் தொடர்பான, அதிலும் குறிப்பாகப் பன்னிரு திருமுறை தொடர்பிலான சிறப்புப் பேச்சுகள் இடம் பெறும். சைவ சமயம், திருமுறை இவற்றில் ஆழ்ங்கால் பட்ட சிறப்புப் பேச்சாளர்கள் இப்பேருரைகளை ஆற்றுவார்கள். ஞாயிற்றுக்கிழமை காலை நடைபெறும் குரு பூசைவிழாவின் ஒரு அங்கமாகக் கேள்வி-பதில் நிகழ்வு ஒன்றும் அவையோரை மிகவும் கவரும் வகையில் நடைபெற்று வருகிறது.

மாநாடு தொடர்பாகப் பல்வேறு போட்டிகளும் மாணவர்களுக்கு நடத்தப்பட்டு வருகின்றன. இளைய தலைமுறையினரையும் திருமுறை சென்றடைய வேண்டும் என்னும் நோக்கில் இவை நடத்தப் பெறுகின்றன. போட்டியில் வெற்றி பெற்ற மாணவர்கள் மாநாட்டு விழாவில் மேடையேறித் தங்கள் திறமைகளை வெளிப்படுத்துவதும் வழக்கமான நிகழ்வே.

ஒவ்வொரு ஆண்டும் மாநாட்டு விழாவில் பன்னிரு திருமுறை தொடர்பான புத்தகங்கள், ஒலி வட்டுகள் இவையும் வெளியிடப்பட்டு வருகின்றன. 2012ஆம் ஆண்டின் வெளியீடுகளில் ஒன்றுதான், இதோ உங்கள் கைகளில் தவழ்கின்ற இப்புத்தகம்"


சிங்கப்பூர்

திருமுறை மாநாடு ஏற்பாட்டுக் குழுவினரின்

2012ஆம் ஆண்டு வெளியீடு